புதுக்கோட்டை மாவட்டத்தில் கல்கி—I

# கல்கி

KALKI
18.1.87
ரூ. 1.50






# "என்ன யாருங்கய்யா மதிக்கறாங்க..?"



— வருத்தப்படுகிறார் ஓர் எம்.எல்.ஏ.

"கடந்த பொதுத் தேர்தல் வெற்றிச் செய்திக்குப் பிறகு, எங்கள் தொகுதி எம்.எல்.ஏ.வைக் காணவில்லை' என்று உங்கள் தொகுதியிலிருந்து எங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அது விஷயமாக உங்களிடம் பேச வேண்டும். எப்போது சந்திக்கலாம்?'' என்று குளத்தூர் தொகுதி அ.இ.அ.தி.மு.க. எம்.எல்.ஏ. மாரிமுத்துவைப் போனில் கேட்டபோது ரொம்பவும் படபடத்துப் போனார்.

''ஐயா, அப்படிங்களாய்யா எழுதியிருக்காங்க? வேண்டாதவங்கதாங்கய்யா அப்படி எழுதியிருக்காங்க. அதையெல்லாம் நம்பிடாதீங்கய்யா. ஐயாவுக்கு எப்போ சௌகர்யப்படுமோ அப்போ நானே ஐயாவைத் தேடி வந்து பார்க்கிறேங்கய்யா. இப்போ அன்னவாசலுக்குப் பொதுக் கூட்டத்துக்காகப் புறப்பட்டுக்கிட்டே இருக்கேங்கய்யா. நாளைக்கு ராத்திரி ஒன்பது மணிக்கு ஐயாவுக்குச் சௌகர்யப்படும்னா நானே ஓடி வர்றேங்கய்யா...'' என்று அவர் வார்த்தைக்கு வார்த்தை 'ஐயா' போட்டுப் பேசியதும் நமக்கே தர்மசங்கடமாகிவிட்டது.

''சரி, வாருங்கள்!'' என்றோம்.

அடுத்த நாள் நாம் தங்கியிருந்த ஹோட்டலுக்கு ஒரு கற்றை ஃபைல்களோடு வந்தார். தமது தொகுதி வளர்ச்சிக்காகத் தாம் சட்டமன்றத்திலும் மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்திலும் பேசிய பேச்சுக்களின் நகல்களைக் கொடுத்தார். அதற்குமுன் அவருக்கு வந்திருந்த ஒரு இன்லண்ட் லெட்டரைக் கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொன்னார்.

'இனி எங்கள் தொகுதிக்கு இடைத்தேர்தல் வந்தாலன்றி வேறு விமோசனம் இல்லை. அதனால் — உண்மையிலேயே உனது தொகுதிக்கு நீ நல்லது செய்ய வேண்டுமென்று



எம்.எல்.ஏ.: தொகுதியில அட்லீஸ்ட் ஒரு தடவையாவது சுற்றுப் பயணம் செய்யாதது எப்பேர்ப்பட்ட தப்புன்னு இப்பத்தான் புரியுது!

இவர்: எப்படி?

எம்.எல்.ஏ.: தொகுதிக்கு நான் கேட்ட மேம்பாலத்துக்கு அரசு அனுமதி வழங்கிய பிறகுதான் தெரியுது தொகுதியில ரயில்வே லைனே கிடையாதுங்கிறது!

— கடுவை கோபால்சாமி

நினைத்தால் முதலில் நீ செத்துப் போ. இல்லையெனில் நாங்களே அதைச் செய்ய வேண்டியிருக்கும்!' — சென்னையிலிருந்து ஒருவர் எழுதியிருந்த அக்கடிதத்தின் சாராம்சம் இதுதான்.

"எப்படி எழுதியிருக்காங்கன்னு பார்த்தீங்களாய்யா? ஒரே ராத்திரியிலே எல்லாரும் மாளிகைக்குக் குடி போய்விட முடியுமாங்களாய்யா? கொஞ்சம் கொஞ்சமாத்தாங்கய்யா முன்னேற முடியும்! இதைச் சொன்னா இவங்களுக்கு என்னைப் பிடிக்கலீங்கய்யா. இப்படி எழுதறாங்கய்யா...

"இந்தக் கடிதம் நூற்றுக்கு நூறு கண்டனத்துக்குரியதே. அதில் எள் முனையளவு கூடச் சந்தேகமே இல்லை. ஆனாலும் இது மாதிரியான மிக மட்டரகமானதொரு கடிதத்திற்கான தூண்டுதலின் அடிப்படையைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால், எப்போதாவது நடக்கும் இடைத் தேர்தல்களின் போது, அந்தத் தொகுதிக்கு ஆளும் கட்சி செய்யும் அபரிமிதமான நன்மைகள்தானே! ஆக, இப்படிப்பட்ட கிரிமினல் தூண்டுதல்களுக்கும் ஆளும் கட்சியின் செய்கைகள் தானே அடிப்படையாகத் தெரிகிறது?"

"ஐயா, அது பாலிடிக்ஸ். கலைஞர் ஒண்ணு செஞ்சாரு, உடனே புரட்சித் தலைவரும் ஒண்ணு செஞ்சு, அதைக் கவுண்டர் பண்ணலின்னா ஆட்சி நடத்த முடியுங்களாய்யா? சரி, அது கிடக்கட்டுங்கய்யா, நான் இவங்களுக்கு என்ன கெடுதல் செஞ்சேன், இப்படி எழுதியிருக்காங்க?"

"அதைத்தான் உங்களிடம் நாங்கள் கேட்கிறோம்!"

"ஐயா, எங்க தொகுதி ரிசர்வ் தொகுதி. எல்லா ஜாதி ஜனங்களும் இருக்காங்க. அன்னிக்கு ஹரிஜனங்க நடத்தப்பட்ட மாதிரி இன்னிக்கு இல்லீங்கய்யா... எவ்வளவோ மாறிடிச்சு. நம்ம பிள்ளைங்க காலத்திலே இன்னும் மாறிடும். அது கொஞ்சம் கொஞ்சமாத்தான் நடக்கும். இன்னிக்கு எம் பையன் கால்ல செருப்புப் போட்டுக்கிட்டு மத்த ஜாதிக்காரங்களோட சமமா நடக்கறான். அதுக்காக நான் நடந்திட முடியுங்களாய்யா. நான் இன்னமும் மத்த உயர் ஜாதிக்காரங்களைக் கண்டா செருப்பைக் கழட்டிட்டுத்தான் பேசறேன். கோயிலுக்குப் போனா என்னையும் உள்ளே வந்துதான் சாமி கும்பிடச் சொல்றாங்க. ஆனாலும் நான் உள்ளே போறதில்லீங்கய்யா. வெளியிலேயேதான் நின்னுக்குவேன். தீபாராதனையையும் திருநீறையும் வெளியிலேயே கொண்டுக்கிட்டு வந்து கொடுத்திடுங்கய்யான்னு சொல்லிடுவேன். அப்படியெல்லாம் இருக்கிறதாலதான், 'சரி, சரி, இவன் எம்.எல்.ஏ. ஆனாலும் அடக்கமாத்தான் நடந்துக்கிறான்'னு மதிக்கறாங்க. இதெல்லாம் இந்தச் சின்னப் பசங்களுக்குப் புரியறதில்லீங்கய்யா."

"நியாயம்தானே. இந்தக் கம்ப்யூட்டர் யுகத்தில் நீங்கள் எதற்காக இப்படி ஜாதிக்கு மரியாதை தர வேண்டும்? ஒருவேளை உயர் ஜாதிக்காரர்கள் உங்களிடம் அப்படி எதிர் பார்க்கிறார்களா என்ன?"

"இல்லீங்கய்யா. அவங்கள்லாம் அப்படி எதிர்பார்க்கலை. நான்தான் அப்படி நடந்துக்கறேன். என்ன செய்யறதுங்கய்யா, என்னால் வேறே மாதிரி நடந்துக்க முடியலீங்களே!"

"சரி, அதெல்லாம் கிடக்கட்டும். குளத்தூரிலிருந்துதான் உங்களைக் காணவில்லை என்று எங்களுக்கு எழுதியிருக்கிறார்கள். தேர்தல் வெற்றிக்குப் பிறகு, நீங்கள் அங்கு போகவே இல்லையா?"

"என்னங்கய்யா நீங்களும் அப்படிச் சொல்லிட்டீங்க. குளத்தூர் என்னோட தொகுதி. அங்கே நான் போகாம இருக்க முடியுங்களா?"

"கடைசியாக எப்போது சென்றீர்கள்? தேதியைச் சொல்லுங்கள்!"

"திருச்சிக்குப் போகும் ஒவ்வொரு தடவையும் அந்த வழியாத்தாங்கய்யா போறேன். அங்கே இறங்கி டீ குடிக்கிறேன்..."

"இறங்கி டீ குடிப்பதெல்லாம் தொகுதிக்குப் போனதாக அர்த்தமாகிவிடுமா? ஊருக்குள் சென்று மக்களைச் சந்தித்தீர்களா? அவர்களின் பிரதிநிதி என்ற முறையில் குறைகளைக் கேட்டீர்களா?"

"யார் வீட்டுக்குங்கய்யா நான் போக முடியும்? போனா என்னை 'வா'ன்னு சொல்றதுக்குக்கூட ஆளில்லீங்கய்யா. எப்படீங்கய்யா போக முடியும்?"

"தேர்தல் நேரத்தில் மட்டும் ஓட்டுக் கேட்கப் போகிறீர்களே, அப்போது வரவேற்பை எதிர்நோக்கியா செல்கிறீர்கள்? அப்படி இப்போதும் போக வேண்டியது தானே?"

"தேர்தல் நேரத்திலே போற மாதிரி எல்லா நாள்லேயும் போக முடியுங்களாய்யா!"

"அப்படிப் போகவில்லையென்றால் தொகுதி மக்கள் நம்பிக்கை இழக்கத்தானே செய்வார்கள்?"

""அவர்கள் கேட்டு எதையுங்கய்யா நான் முடியாதுன்னு சொல்லிட்டேன்? சொல்லச் சொல்லுங்கய்யா பார்ப்போம்!''

''தொகுதிப் பக்கம் போனால்தானே அவர்கள் உங்களிடம் முறையிட முடியும்?''

''மக்கள் என்னைச் சந்திக்க வசதியாக இருக்கட்டும்னுதானுங்கய்யா நான் கீரனூரிலிருந்து புதுக்கோட்டைக்குக் குடி வந்தேன். அங்கே எந்த நேரம் வந்தாலும் என்னைச் சந்திக்கலாங்களேய்யா. அவங்கதான் என்னைச் சந்திக்கறதேயில்லை!''

''ஏன் சந்திப்பதில்லை? ஒருவேளை சொன்னாலும் நீங்கள் செய்ய மாட்டீர்கள் என்ற அவநம்பிக்கையா?''

''செய்ய மாட்டேங்கற அவநம்பிக்கையில்லீங்கய்யா. இவனால என்ன செஞ்சுட முடியும்கிற அவநம்பிக்கைதான். உதாரணத்துக்குப் பாருங்க. என் தொகுதியில இருக்கிறதுதான் காவேரி மில். மூடிட்டாங்க. சுமாரா ஆயிரம் தொழிலாளர்களுக்கு மேல் வேலையில்லாம இருக்காங்க. அதில யாராவது ஒருத்தராவது அவங்க எம்.எல்.ஏ.ங்கற முறையிலே என்னை வந்து பார்த்திருப்பாங்களா? இவனுக்கு யாரைத் தெரியும்னு யாருமே என்னை வந்து சந்திக்கலை. ஆர்.எம். வீரப்பனைப் பார்த்தா எல்லாம் முடிஞ்சுடும்னு நினைச்சு அந்தப் பக்கமே போனாங்க. இப்போ என்ன ஆச்சு? ஒண்ணும் நடக்கலை. ஆனா நானா இருந்தா சும்மா விட்டிருப்பேனா? புரட்சித் தலைவர் கால்ல விழுந்து கதறிக் காரியத்தைச் சாதிச்சிருக்க மாட்டேனா?''

''அவர்களில் யாரும் உங்களை அணுகாமல் போனது தவறாகவேகூட இருக்கட்டும். உங்கள் தொகுதி என்ற முறையில் நீங்களாகவே சென்றிருக்க வேண்டாமா?''

''நான் போனா யாருங்கய்யா மதிக்கறாங்க?''

''யாருமே மதிப்பதில்லை என்கிறீர்கள். ஆனால் இரண்டு முறை வெற்றி பெற்றிருக்கிறீர்களே, அது எப்படி?''

''எல்லாம் புரட்சித் தலைவரோட ஆசிதாங்கய்யா!''

''அவர் ஆசி மட்டும் இருந்தால் போதுமா? மக்கள் உங்கள் மேல் நம்பிக்கை கொள்ள வேண்டாமா? மக்கள் குறைகளைப் போக்க வேண்டாமா?''

''ஐயா, தப்பா நெனைச்சிடாதீங்க. நான் கட்சிக்கு வந்து எம்.எல்.ஏ. ஆகி இதுவரைக்கும் பைசாக்கூட சொத்து சேர்க்கலை. சொந்த வீடு கூட இல்லை. போன தேர்தலுக்கு வாங்கின கடனைக் கூட இன்னமும் அடைக்க முடியாம திண்டாடிக்கிட்டிருக்கேங்கய்யா. இப்படிப்பட்ட நானா மக்கள் குறைகளுக்காகப் போராட மாட்டேன். என்னைத் தேடி வந்து சொல்லட்டும். ராப் பகலா நாயா உழைக்கத் தயாரா இருக்கேன். பிரச்னை தீரலைன்னா அவங்களோட சேர்ந்து நானும் உண்ணாவிரதம் இருந்து போராடவும் தயாரா இருக்கேங்கய்யா!'' என்று ரொம்பவும் உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னார் மாரிமுத்து.

— இளங்கோவன்

# அடுத்த இதழ்

புதுக்கோட்டை மாவட்டத்தில் கல்கி – II



மூடிய மில்களும்
பட்டினி கிடக்கும் தொழிலாளர்களும்
— கவர் ஸ்டோரி

''சில குறைகள் இருப்பது உண்மைதான்!''
— புதுக்கோட்டை மாவட்டக் கலெக்டர் பேட்டி



அழிந்து வரும் அதிசயங்கள்
— சிறப்புக் கட்டுரை





இவர்கள் பிரார்த்தனை நிறைவேறுமா?

# “ப்ரமண்டலத்தில் இருக்கும்

**கா**லை நேரம். வெள்ளா குளம் கிராமமே அமைதியாயிருந்தது. நமக்குக் கடிதம் எழுதிய ஆரோக்கியசாமி யார் என்று விசாரிக்க ஆட்களைத் தேடியபோது, யாரும் அகப்படவில்லை. சிறிது தூரத்தில் வாடகை சைக்கிள் கடை ஒன்று இருந்தது.

“ஏங்க ஆரோக்கியசாமின்னு....”

“அப்பா பேருங்க...?”

அந்தக் கிராமத்தில் நிறைய ஆரோக்கிய சாமிகள். அதனால் விஷயத்தைச் சொன்னோம். நமக்குக் கடிதம் எழுதியிருந்த ஆரோக்கியசாமி அவசரமாக வெளியூர் செல்ல வேண்டியிருந்ததால் நமக்குப் பதில் அந்தோணிசாமி என்பவரை விசாரிக்கச் சொல்லிவிட்டுச் சென்றிருப்பதாகச் சொன்னார்கள்.

“சரிங்க... அந்தோணிசாமி எங்கிருக்கிறாருங்க?”

“அவருங்களா, இன்னிக்கு ஞாயிறுங்களே கோவிலுக்கு (சர்ச்) போயிருக்காருங்க....”

**கூ**ரைகள் உதிர்ந்து கொண்டிருக்கும் சர்ச். அப்போதுதான் அவசர அவசரமாகச் சர்ச்சுக்குள் நுழையப் போன அந்தோணி சாமி நம்மைக் கண்டதும் அடையாளம் புரிந்து ஓடி வந்தார்.

“என்னங்க அந்தோணிசாமி... ஊர் மக்களே ஒண்ணு சேர்ந்து மண் அணை ஒன்று கட்டியிருக்கீங்களாமே?”

“ஓ! அதுவா? வாங்க, பார்க்கலாம்...”

வயல்களிடையே வகிடாய்ச் செல்லும் வரப்புகளில் இரண்டு பர்லாங் நடந்த பிறகு, ஒரு திடீர் இறக்கம்.

“இதாங்க அம்புலி ஆறு....”

கொஞ்சமாகத் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது.

“மழைக் காலத்தில் நெறையப் போகுமுங்க. இதோ இதைத்தாங்க நாங்க கட்டினோம்.”

அவர் காட்டிய இடத்தில் சுமார் நான்கடி உயரமுள்ள மண் சுவரொன்று சுமார் பத்தடி தூரத்திற்குக் கட்டப்பட்டிருந்தது. வேகமாகத் தண்ணீர் வந்தால் கரைந்து ஓடி விடும்.

“இந்தச் சுவரில் தேங்கும் தண்ணீர் இந்தக் கால்வாய் வழியா ஓடி எங்க ஏரிக்குப் போயிடும். அதிலிருந்துதாங்க விவசாயம். இப்பப் பாருங்க.... இப்படி நாங்க கட்டற தலை 'கீழ' இருக்கிறவங்களுக்குத் தண்ணி வர்றதில்லேன்னு சண்டைக்கு வர்றாங்க. அவுங்களே வந்து இந்த மண் அணையை வெட்டி வுட்டுட்டும் போயிடுவாங்க. மறுபடியும் நாங்கள்லாம் ஒண்ணாச் சேர்ந்து ஒரு நாளைக்கு வந்து இதைக் கட்டிட்டுப் போவோம். இப்படித்தாங்க எங்க விவசாயம் நடக்குது. அரசாங்கமாப் பார்த்து ஆத்துல வர்ற தண்ணியைப் பிரிச்சு ஆளுக்கு இவ்வளவுன்னு கொடுத்திட்டாப் பிரச்னை இல்லேங்க. ஆனா செய்ய மாட்டேங்கறாங்

# எங்கள் பிதாவே...''

களே....'' என்று வருத்தப்பட்டுச் சொன்ன அந்தோணிசாமி.

''இதுமட்டுமில்லீங்க, வரும்போது பார்த்திருப்பீங்களே சார் ஒரு பாலம்... அது பாலமா? ஆற்றின் குறுக்கே தடுப்பணை (check dam) மாதிரி கட்டியிருக்காங்க. மழைக் காலங்களிலெல்லாம் தண்ணீர் அதற்கு மேல் குமிழியிட்டுக் கொண்டு ஓடும்....''

''அப்போ எப்படீங்க ஊரிலிருந்து வெளியே போவீங்க...?''

''அதை ஏன் கேக்கறீங்க? அப்போல்லாம் ஆலங்குடிக்குப் போகணும்னு கொத்தமங்கலம் வழியாச் சுத்திக்கிட்டுத்தாங்க போவணும். பாலம் கட்டிட்டாங்கன்னு ஆறு கி.மீ. போனாப் போதுங்க. இப்போ மாதிரி பதினொரு கி.மீ. சுத்த வேண்டியதில்லே. பஸ்ஸூம்விடலாம். சௌகரியமாப்போகும். நாங்களும் இதைச் சுதந்திரம் கிடைச்ச நாள் லேர்ந்து சொல்லிக்கிட்டுத்தான் வர்றோம். யாரும் கண்டுக்கலே. அதனால கடந்த 84 பொதுத் தேர்தலைப் புறக்கணிக்கிறதா அறிக்கை விட்டோம். உடனே விழுந்தடிச்சுக்கிட்டு அப்போதைய கலெக்டர் கற்பூர சுந்திர பாண்டியன் ஓடி வந்து, எல்லாம் செஞ்சு குடுக்கிறதா வாக்குறுதி தந்தார். யாரும் தேர்தலைப் புறக்கணிக்காதீங்கன்னு கேட்டுக்கிட்டார். நாங்களும் வோட்டுப் போட்டோம். அப்புறம் என்னாச்சு? அவ்வளவுதான். பழைய குருடி கதவைத் தெறடிங்கிற கதைதான்.... விரக்தியோடு சொல்லிக் கொண்டே வந்த அவரிடம், ''பள்ளிக்கூடம் இருக்குங்களா?'' என்றோம்.

''இருந்து என்னங்க பிரயோஜனம்? அஞ்சாம் வகுப்பு வரை இருக்கு. நூத்தி இருபத்தஞ்சு கொழுந்தைங்க படிக்கறாங்க. ஆனா ரெண்டே டீச்சர்தான் இருக்காங்க. எப்படீங்க போதும்? அஞ்சாம் வகுப்புக்கு மேலே படிக்கணும்னா மூணு கி.மீ. தூரத்திலிருக்கிற கொத்தமங்கலத்துக்கு நடந்து போய்த்தான் படிக்கணும். அதனாலேயே நிறையப் பசங்க தொடர்ந்து படிக்கிறதில்லீங்க...'' தங்களூர் வேதனைகளையெல்லாம் கொட்டித் தீர்த்தார் அந்தோணிசாமி.



* இங்குதான் பாலம் வேண்டும் என்கிறார்கள்.



* மக்களே கட்டிய மண் அணை....

கடைசியில் சர்ச்சுக்குள் எட்டிப் பார்த்தோம். நம்பிக்கை வெளிச்சங்களைப் போல் நிறைய மெழுகுவர்த்திகள் ஏற்றி வைக்கப்பட்டு, 'பரமண்டலத்திலிருக்கும் எங்கள் பிதாவே, உம்முடைய ராஜ்ஜியம் வருக...'— அவ்வூர் மக்கள் அனைவரும் மண்டியிட்டுப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர். வேறு வழி? நாங்களும் சிலுவையைச் சுமந்த நெஞ்சோடு வெளியே வந்தோம்.



* அந்தோணிசாமி

— கௌசல்யா


பாரதம்
போலீஸ்னு நாய் தான் வரும்!.. இதென்ன அக்ரமம்!... ரொம்ப தப்பு!
யாழ்ப்பாண மக்கள்
குண்டு வீச்சு


அது கெடக்குது.. நீ வா!
ஜெயவர்த்தன
குடியரசு தினவிழா புறக்கணிப்பு
முஸ்லிம் சமுதாயம்!


ஹிந்தி எதிர்ப்புத் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்த வேண்டும்—
ஜெயலலிதா அறிக்கை




# கல்கி

1987 ஜனவரி 18
மலர் 45 இதழ் 25
அக்ஷய தை 5




# கதிகலங்க அடித்த பொன்னையன்!

மக்களின் வரிப்பணத்தில், ஆபாசமான நூல்களை வாங்கி, நூலகங்களில் வைக்க முடியாது' என்று கூறிய அமைச்சர் பொன்னையனை, எவ்வளவு பாராட்டினாலும் போதாது. அரசு மதுக்கடை லைசென்ஸில் பணம் பண்ணுவதும், லாட்டரி நடத்துவதும் தார்மீக ரீதியில் எவ்வளவு தவறோ, அவ்வளவு தவறு வரிப்பணத்தில் ஆபாச நூல்களை வாங்கி, நூலகங்களில் அடுக்குவது. அரசு, விபசார விடுதிகளை நடத்துவதற்கும் இதற்கும் அதிக வித்தியாசமில்லை. நல்ல கருத்தைக் கூறிய பொன்னையனை அதற்காக வாழ்த்தும் போதே, வேறு சில எண்ணங்களையும் அவருடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறோம்.

எவ்வளவோ வளர்ச்சி அடைந்து விட்ட அமெரிக்கா போன்ற நாடுகளில் கூட, நூலக இயக்கம் என்பது அதிமுக்கியமானதாகக் கருதப்பட்டு இன்றைக்கும் அரசாங்கமே ஏராளமான நூல்களை விலைக்கு வாங்கி, உலகெங்கிலுமுள்ள அதன் நூலகங்களுக்கு அனுப்பி வைக்கிறது. அப்படியென்றால், இந்தியா போன்ற வளர்ச்சி அடையப் போராடி வரும் நாட்டுக்கு, நூலக இயக்கம் எவ்வளவு முக்கியமானது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஜார் ஆட்சி முடிந்து ருஷ்யாவில் குடியரசு அமைந்த உடனே, அரசு எடுத்த முதல் நடவடிக்கை, நூலக இயக்கத்தைப் பலப்படுத்துவதுதான்! அந்த நாடு சகல விதங்களிலும் இன்று உலகில் தலைநிமிர்ந்து நிற்கக் காண்கிறோம். ஆனால் நமது நாட்டில் சுதந்திரத்துக்குப் பின், நூலக இயக்கத்துக்குப் போதிய அளவு முக்கியத்துவம் தரப்படவே இல்லை.

வீட்டு வரியுடன் இணைந்த நூலக வரி வசூலிலேயே கணக்கம் என்றால், வசூலான வரியைப் புத்தகங்கள் வாங்கப் பயன்படுத்துவதிலும் கணக்கம்தான். ஆரம்பத்தில், நூலகங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் நூல்களில், 600 படிகள் வாங்கிக் கொண்டிருந்த அரசு, அதை 450, 300, 200 என்று குறைத்து, இப்போது 30 பிரதிகளுக்குக் கூட 'ஆர்டர்' தருகிறது. கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதைதான். கேட்டால் 'பணம் இல்லை' என்கிறது. இது சரஸ்வதிதேவியையே தமிழகத்திலிருந்து அடித்து விரட்டுவது போலாகும்.

'நாவல்களை இனி வாங்கப் போவதில்லை; அறிவியல் நூல்களைப் பிரசுரியுங்கள்; விஞ்ஞானக் கதைகளைக் கொண்டு வாருங்கள்' என்கிறார், பொன்னையன். 'நாவல்கள் ஆபாசமாக இருக்கின்றன; நாம் 21 ஆம் நூற்றாண்டுக்குத் தயாராக வேண்டும்' என்று காரணங்களும் கூறுகிறார். விஞ்ஞானக் கதைகளும் அறிவியல் நூல்களும் தமிழில் வரவேண்டியதுதான்; அதில் கருத்து வேற்றுமையே இருக்க முடியாது. ஆனால் அதற்கு அவகாசம் தரப்பட வேண்டும். அரச மரத்தைச் சுற்றி வந்து அடிவயிற்றைத் தடவிப் பார்த்த கதையாக, அமைச்சர் சொல்லிவிட்டாரே என்று அவசரம் அவசரமாக எழுதப்படும் நூல்கள், பெரும்பாலும் பதராகவே இருக்கும்; பணம் சம்பாதிப்பது ஒன்றையே நோக்கமாகக் கொண்டிருக்கும். எனவே, இரண்டு வருஷம் அவகாசம் அளித்து, 'அதன் பிறகு 25 அல்லது 30 சதவீதம் நூல்கள் அறிவியல் நூல்களாகவோ, அறிவியல் கதைகளாகவோதான் வாங்குவோம்' என்று இன்றைக்கே அறிவிக்கலாம். அது நற்பயன் தரும்.

நாவல்கள் உபயோகமற்றவை என்ற எண்ணம் தவறானது. சரித்திர நாவல்கள், நமது பாரம்பரியச் சிறப்புக்களை மட்டுமின்றி, சில சிறுமைகளையும் மக்களுக்கு விளங்க வைப்பவை. ஆன்மீகத்தையும் கலை உணர்வையும் வளர்க்கக் கூடியவை. சமுதாய நாவல்கள், இன்றையச் சூழ்நிலையைப் படம் பிடித்துக் காட்டி, மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தக் கூடியவை. சமுதாயத் தீமைகளையும், மூடப்பழக்கங்களையும் ஒழிக்க உதவுகிறவை. கஷ்டங்களைத் தாங்கி, உறுதியோடு முன்னேற வாசகர்களுக்கு நம்பிக்கை ஊட்டுகிறவை. ஊக்கமும் உற்சாகமும் அளித்து, செயல்திறனை வளர்க்கக் கூடியவை. ஆன்மீக நூல்களும் ஏராளமாக வெளிவருகின்றன.

'மாதாந்திர நாவல்கள்' என்ற போர்வையிலும் சில பத்திரிகைகளின் தொடர் கதைகளிலும் கூட ஆபாசம் விநியோகமாகிறது என்பது உண்மையே. அவற்றை நீக்கி, நூலகங்களுக்கு நல்ல ஆரோக்கியமான நூல்களைத் தேர்வு செய்ய, பாரபட்சமற்ற சிறந்த எழுத்தாளர்கள் அடங்கிய குழு ஒன்றை அரசு அமைக்கலாம். அறிவியல் நூல்களை மட்டுமே வாங்கி அடுக்கினால் நூலகங்களுக்கு மக்கள் போக மாட்டார்கள்; நூலாம்படை தான் பெருகும்.

அரசும் அமைச்சரும் ஏதோ பதிப்பகத்தாருக்குச் சலுகை காட்டுவதாக நினைக்கக் கூடாது. அவர்களுக்குப் பின்னால் எழுத்தாளர்கள், அச்சுக் கோப்பவர்கள், காகித வியாபாரிகள், அச்சு மை உற்பத்தியாளர்கள், பைண்டர்கள் என்று லட்சக்கணக்கான குடும்பங்கள் உள்ளன. அனைவருக்கும் வாழ்க்கைப் பிரச்னை இது; வயிற்றுப் பாடு பிரச்னை.

---

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# அக்னி அம்புகள்!

* 'ஜனநாயகப் படுகொலை' என்ற தலைப்பில் தாங்கள் தீட்டியுள்ள தலையங்கக் கருத்துக்கள் அக்னி அம்புகளாகவும் அர்த்தமுள்ளவையாகவும் உள்ளன. அருமையான விமர்சனம்.

ராஜபாளையம். கே.கே. ராம்ராஜ்.

* ஆளுங்கட்சி செய்யும் சில தவறுகளைச் சுட்டிக் காட்ட, உங்களைப் போல் சில பத்திரிகைகள் இருப்பதால்தான் பத்திரிகை தர்மம் ஓரளவுக்குக் காப்பாற்றப்பட்டு வருகிறது. இதைப் புரிந்து கொள்ளாத சிலர் ஏதோ நீங்கள்தான் எம்.ஜி. ஆர், எது செய்தாலும் குறை சொல்லுவதுபோல் கூறுவது வருந்தத்தக்கது. நல்லதைத் தட்டிக் கொடுத்தும், குறைகளைச் சுட்டிக் காட்டியும் உங்கள் பணிகளைத் தொடருங்கள்.

கோபாலசமுத்திரம். என். வீரவேல்.

* நடிகை என்ற ஸ்தானத்திலிருந்து விலகித் தன் பலம், பலவீனம் பற்றிச் சுயவிமர்சனம் செய்திருக்கும் சுஹாசினியின் பேட்டி, கல்கியின் வித்தியாசமான, பாராட்டப்பட வேண்டிய முயற்சி.

பண்ருட்டி. எஸ். தமீஜுதீன்.

* சுஹாசினியின் பேட்டியில் 'சினிமாவை மறந்த போது' என்று சொல்லிவிட்டு, சினிமா பற்றி அவரிடம் ஆறு கேள்விகளைக் கேட்டுப் பதிலும் பெற்றிருக்கிறீர்கள். அவருடைய பல பதில்களில் அடிக்கடி சினிமா வாடை! பிறகென்ன இப்படி ஒரு தலைப்பு?

* ப்ரோதிமா பேடி தன் வாழ்க்கையின் களங்கத்தைக்கூட தான் செய்த தவறுகளைக்கூட, 'நறுக்' கென்ற துணிச்சலுடன் சொன்னது கண்டு அதிர்ச்சி+ ஆச்சர்யம் எமக்கு! பெண்களைப் பற்றிய அவரது வாதங்கள் புரட்சிகரமானவை; நூறு சதம் உண்மையும்கூட!

ஈரோடு—2. அருண்

* உதட்டளவில் பெண் சுதந்திரத்தைப் பற்றிப் பேசாமல் நடைமுறையில் செய்து காட்டத் துணியும் ப்ரோதிமா பேடியின் ஆக்ரோஷம் பாராட்டுக்குரியது.

கோவை—9. கோ.சு. சுரேஷ்.

* 'அடுத்த ஜனாதிபதியாகும் வாய்ப்புகள் தமிழ்நாட்டு ஆர்.வி. அவர்களுக்கே அதிகம் இருக்கிறது' என்கிற தங்களின் ஜோஸ்யம் பலித்து, தமிழ்நாட்டிற்குப் பெருமை கிடைக்குமாயின் கர்நாடகத் தமிழன் நான் ரொம்பவும்தான் பூரித்துப் போவேன்.

பெங்களூர்—21. ப. மூர்த்தி.

* அடுத்த ஜனாதிபதி யார் என்பதை அலசிய நீங்கள், ஒரு பாயிண்ட்டை விட்டுவிட்டீர்கள். அதாவது சர்தார்ஜியின் பதவிக் காலமே இன்னொருமுறை, நீ(ட்)டிக்கப்படும் வாய்ப்பும் உள்ளதல்லவா?

சென்னை—28. எம். தியாகராஜன்.

* கமலஹாசன்—ஸ்ரீதேவி நடித்துவிட்டால் அது தெலுங்குப் பட டப்பிங் என்று கூடப் பாராமல் விமர்சனம் செய்துவிடுவதா? படத்தில் என்ன சொல்ல வருகிறீர்கள் என்பதே புரியாத படத்துக்கு விமர்சனம் எழுதும் பழக்கத்தை சென்சார் செய்க!

தக்கலை. இராமலிங்க்.

* உஷா சுப்பிரமணியன் எழுதி வரும் 'மோகம் என்பது இதுதானோ?' என்ற தொடர்கதையில், பத்தாவது அத்தியாயத்தில் 40' ஆம் பக்கத்தில் சுந்தரத்தின் மனைவி ஞானம் என்று வருவதற்குப் பதில் சுந்தரத்தின் சகோதரி சிவகாமியின் பெயர் பிரசுரிக்கப்பட்டுள்ளது. பொங்கல் சிறப்பிதழுக்கான மும்முரமான வேலை காரணமாக ஏற்பட்ட பிழையோ?

குடியாத்தம். கே. ஆர். ராஜா.

* நீண்ட நாட்களுக்குப் பிறகு இந்த இதழில் வந்த துணுக்குகள் அத்தனையும் அருமை; அபாரம்.

வலங்கைமான். வலங்கை ஜி. ராஜசேகர்.

* படங்களில் சோகக் கதையைச் சொல்லி, நம்மைக் கண்கலங்க வைக்கும் நடிகர் சந்திரசேகர், நிஜ வாழ்க்கையில் — நிஜ ஜெயில் கைதிகளின் கதை சொல்லியும் நம்மைக் கண்கலங்க வைத்துவிட்டார்!

லால்குடி. எம். இராஜேந்திரன்.

* எதற்கெடுத்தாலும் ஆண்களை மட்டுமே குற்றம் சாட்டும் பெண் குலத்தினர், வசதியான மாப்பிள்ளை கிடைக்கும்போது, வாய்மை தவறிப் போவதையும் நியாயப்படுத்தும் கேவலத்தையும், வரதட்சணை வாங்குவதில் பெண் வீட்டாரும் எந்த அளவுக்குப் பொறுப்பாளியாகின்றனர் என்பதையும், தேவி பாலாவின், 'பதில் தெரிஞ்சா வாங்க' சிறுகதை நன்கு எடுத்துக் காட்டுகிறது. மனச்சாட்சி மங்கிப் போய்க் கொண்டிருக்கும் இச்சமுதாயத்தில் இத்தகைய படைப்புகள் ஓரளவாயினும் பாதிப்பை ஏற்படுத்தும் என்று நம்புகின்றேன்.

அண்ணாமலைநகர்—2. எம்.பி. ராமராஜன்.

21.12.86 கல்கி இதழில் கடைசி பக்கக் கட்டுரை பார்த்தேன். தியாகப் பிரும்மத்தின் இல்லத்தில் வௌவாலும் இல்லை; துர்நாற்றமும் இல்லை. சத்குரு ஆராதனை விழா குழுவில் நான் ஆலோசனைக் குழு அங்கத்தினன். எனது நண்பர் முத்துசாமி விழாக் குழு அங்கத்தினரே தவிர சபா காரியதரிசி இல்லை.

பெங்களூர். டி.எம்.எஸ். மணி.

(முத்துசாமி காரியதரிசியாக இல்லாமலிருக்கலாம்; ஆனால் திருவையாறில் உள்ளவர்கள் 'செகரெட்டரி' என்று குறிப்பிட்டே அவரை அழைத்து வரச் செய்தார்கள். வௌவால், துர்நாற்றம் விஷயத்தில், நான் நேரில் பார்த்து உணர்ந்ததையே எழுதியிருக்கிறேன்; எழுதியதில் உறுதியாகவும் நிற்கிறேன்' என்கிறார் கட்டுரையை எழுதிய எஸ். சந்திரமௌலி. — ஆசிரியர்)



# ராமுவும் அப்பாவும் அந்தச் சலூனும்...

பாபுஜி

அந்த மகிழ்ச்சியான வேளையில் குறிப்பிட்ட வார்த்தையைப் பிரயோகித்து அப்பா உற்சாகத்தையே குட்டிச்சுவராக்கி விடுவாரென்று ராமு கோழித் தூக்கக் கனவில்கூட நினைக்கவில்லை. பள்ளிக்கூடம் திறக்க ரொம்....ப நாளாகும் என்றதொரு உறுதியான சந்தோஷத்தில் இருந்தபோதுதான் அப்பா இதைச் சொன்னார், ''டேய் பையா... முடி வெட்டிக்கோயேன்'' என்ற ஆலோசனை தான் அது. எந்த வார்த்தையைக் காதால் கேட்கவே பயந்து கொண்டிருந்தானோ, அதைக் கடைசியில் கேட்டே ஆயிற்று.

இந்த அப்பா ஏன் இவ்வளவு மோசமாக இருக்கிறாரென்று அவனுக்குப் புரியவே

யில்லை. எத்தனை நாளுக்கொரு தரம் இப்படி முடி வெட்டச் சொல்வாரென்றும் அவனுக்குத் தெரியவில்லை. திடீரென்று நினைத்துக் கொண்டதும் சொல்வாரோ! சில சமயங்களில், தான் ஏதும் குறும்பு செய்தால், அவர் வழங்கும் தண்டனைகளில் இதுவும் ஒன்றோ என்றுகூடச் சந்தேகித்தான். சமீபத்தில் குறும்பு எதுவும் செய்ததாக அவனுக்கு நினைவில்லை. யாருக்கும் தெரியாமல் ஒரு தடவை பாப்பாவின் கன்னத்தைக் கிள்ளியது ஞாபகத்துக்கு வந்தது. இந்தக் காரியத்தைச் செய்தபோது ஆட்டுரலைத் தவிர வேறு யாரும் அங்கே இல்லையே என்று நினைத்தான். 'நிச்சயமாக ஆட்டுரல் சொல்லிக் கொடுத்திருக்க முடியாது' என்று அவன் நம்ப முயற்சி செய்தாலும் முன்பொரு முறை, கம்பளிப் போர்வை பேசியதாகப் பாட்டி சொன்ன கதை நினைவுக்கு வந்து, அவன் நம்பிக்கையைத் தகர்த்தெறிந்தது.

''ஆட்டுரல் சொல்லுச்சாப்பா?''

அப்பா அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார். ''என்னடா உளர்றே?''

சேச்சே.... நிச்சயமாக ஆட்டுரல் சொல்லவில்லை. தான் முந்திக் கொண்டதே மகாத் தப்பு என்பதை அவன் முற்றிலும் உணர்ந்து மௌனம் சாதித்தான்.

அப்பா கைவைத்த பனியனை மட்டும் போட்டுக் கொண்டு செருப்பைத் தேடினார். 'கடவுளே, அந்தச் செருப்பு காணாமல் போயிருக்க வேண்டும்' என்று அவசரமாக ஒரு வேண்டுகோளைச் சமர்ப்பித்தான் ராமு.

ஆனால் அவன் வேண்டுகோள் கடவுளிடம் போய்ச் சேருவதற்குள், மேஜைக்கடியிலிருந்து செத்த எலியைத் தூக்குவது போல நுனியைப் பிடித்துத் தூக்கி வெளியில் போட்டதோடு காலிலும் மாட்டிக் கொண்டார் அப்பா.

''லட்சுமி, டப்பாவில் ஐந்து ரூபா இருக்கும். எடுத்துட்டு வா.''

ஆயிற்று. இதோ அம்மா எடுத்துக் கொண்டு வந்துவிடுவாள். நினைக்கும் போதே அழுகை முட்டிக் கொண்டு வந்தது ராமுவுக்கு. சில சமயங்களில் பத்துப் பைசாவுக்கு மக்காச் சோளம் வாங்கினாலே கண்டபடி திட்டுகிற அப்பா, கொஞ்சம்கூட இஷ்டமில்லாத முடி வெட்டலுக்கு ஐந்து ரூபாய் கொடுக்கத் துணிவது ஏன் என்று, ஒரு கணம் ஆச்சரியமாகக் கூடப் பட்டது அவனுக்கு. இதை அம்மாகூட ஆட்சேபிக்காதது தான், அவனுக்கு அவள் இழைக்கின்ற பெரிய துரோகமாக நினைத்தான். அந்த ஐந்து ரூபாயில் ஏராளமான கமர்கட் வாங்கலாமே, ஏன் சின்னதாக ஒரு ராக்கெட்கூட வாங்க முடிந்தாலும் முடியும் என்ற ஆசை ஏற்பட்ட போது, தன் இயலாமையை நினைத்துப் பெரிதும் துக்கித்தான்.

அப்பா சைக்கிளின் பூட்டைத் திறந்து வெளியே கொண்டு வந்தார். 'வயிற்றை வலிக்கிறது' என்று சொல்லலாமா என்று ஒருகணம் நினைத்தான். பதிலாக மருந்து என்ற பெயரில் பாட்டி வலுக்கட்டாயமாக ஊற்றுகின்ற எண்ணெயை எண்ணிப் பயந்து



அந்த எண்ணத்தைக் கைவிட்டான். பெரியவனாக வளர்ந்ததும் முதல் காரியமாக, அந்தப் பாட்டிலை அலமாரியிலிருந்து எடுத்து வெகு தூரத்திலிருக்கும் டெல்லியில் கொண்டு போயாவது எறிந்துவிட்டு வந்துவிட வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

சைக்கிள் கேரியரில் அவனைத் தூக்கி உட்கார்த்தி வைத்தார் அப்பா. வழியில் அவன் லேசாக அழுவதையோ, அவ்வப்போது விம்முவதையோ, விட்டு விட்டுச் சிணுங்குவதையோ அவர் சற்றும் கவனிப்பதாகத் தெரியவில்லை. அவனைச் சலூனில் கொண்டு போய் விடுவதுதான் தான் பிறப்பெடுத்த தன் பயன் என்பதுபோல் கருமமே கண்ணுயினராகப் பெடலை மிதித்துக் கொண்டிருந்தார். வழியிலுள்ள எத்தனையோ மிட்டாய்க் கடைகளையும், பழக் கூடைக்காரர்களையும் முற்றிலுமாகப் புறக்கணித்துவிட்டு எங்கோ ஒரு சலூனைத் தேடிக் கொண்டு போவது அடிமுட்டாள்தனமாகப்பட்டது அவனுக்கு.

கடைசியில் ஓர் அழகான பொம்மைக் கடைக்குப் பக்கத்திலுள்ள சலூனில் சைக்கிளை நிறுத்தி அவனையும் இறக்கிவிட்டார் அப்பா. வழக்கம்போல் அந்தக் கடையின் சிவப்பு நிற போர்டைக் கண்டதும், வயிற்றுக்குள் பகீர் என்றது. அந்த நிமிஷத்திலேயே, அப்பாவின் கையை உதறிவிட்டு ஓடிவிடலாமா என்று கூடத் தோன்றியது. ஆனால் சலூனுக்கு அருகில் அது நடவாது என்றே நினைத்தான். அந்த சலூன்காரரும் அப்பாவின் பக்கம் ஒருவேளை சேர்ந்து கொள்ளக் கூடும். இருவரும் சேர்ந்தால் மிக எளிதாகப் பிடித்துவிட முடியும். அப்படி அகப்பட்டுவிட்டால் மொட்டை அடித்து விடக் கூடிய அளவுக்குக் கொடூரமானவர்களாக மாறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை என்று நினைத்தபோது அவனுக்குக் குலை நடுங்கியது.

''முருகேசு!'' என்று அப்பா கூப்பிட்டாரோ இல்லையோ, கையில் கத்தியுடன் வெளியே வந்த முருகேசு, ''வாங்க சார்!'' என்று பல்லெல்லாம் இளித்துக் கொண்டு வரவேற்றது, ராமுவுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. இப்பேர்ப்பட்ட கொடியவனுடன், அப்பா எப்படி இவ்வளவு சினேகமாக இருக்கிறார் என்று வியந்தான். இங்கே ஒருமுறைகூட அப்பா முடி வெட்டிக் கொண்டதேயில்லை என்பது நினைவுக்கு வந்தபோது, அவனுக்கு ஆத்திரமாகக் கூட இருந்தது. இந்த முருகேசைப் போலீஸ்காரர்கள் கூடக் கைது பண்ணாதது ஏன் என்பதும் அவனுக்குப் புரிபடாத விஷயங்களில் ஒன்று.

ஆனால் சலூனில் புதிதாகச் சேர் ஒன்று 'மெத்து மெத்'தென்ற குஷனில் வந்திருப்பதை அப்போதுதான் கவனித்தான் ராமு. அதில் உட்கார்ந்திருக்கும் சுகத்தில் மெஷின் கட்டிங் எரிச்சல் சற்று குறையக் கூடும் என்று நம்பி சிறிது சந்தோஷப்பட்டான். ஒரு காலத்தில் வெள்ளையாயிருந்த துணி ஒன்றினால் சிட்டைத் தட்டிவிட்டு, இரண்டு கைப்பிடிக்




**அ**றிவிப்பாளர்: விவசாயிகளே! தமிழ்நாட்டிலேயே பயிறு வகைப் பயிர்களுக்கான ஆராய்ச்சி நிலையம் புதுக்கோட்டை மாவட்டம் வம்பன் என்னும் ஊரில் உள்ளது. அங்கு பயிறு வகைப் பயிர்களான துவரை, பாசிப் பயிறு, தட்டப்பயிறு, சோயா பீன்ஸ், வரகு, சாமை ஆகியவைகளைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து வருகிறார்கள். அந்த விவரங்களைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்க அங்கு உதவிப் பேராசிரியராகப் பணிபுரியும் டாக்டர் ராமமூர்த்தி வந்திருக்கிறார். ''வணக்கம் டாக்டர் ராமமூர்த்தி அவர்களே, உங்கள் ஆராய்ச்சி நிலையத்தில் இதுவரை நடந்துள்ள ஆராய்ச்சிப் பணிகளைச் சொல்ல முடியுமா?''

ராமமூர்த்தி: எங்கள் ஆராய்ச்சி நிலையம் தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்துடன் இணைந்தது. துவரை, உளுந்து, தட்டப்பயிறு, பாசிப் பயிறு ஆகிய பயிறு வகைகளை ஆராய்ச்சி செய்து புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். எங்கள் கண்டுபிடிப்புக்களில் உருவாகும் பயிறு வகைகள் குறைந்த நாட்களில் மகசூல் கிடைக்கும் வகையில் அமைந்தவை. இவற்றுள் உளுந்து இலைகள் மஞ்சளாகிப் போகும் நோயைத் தடுக்கவும், துவரை இலைகளில் தேமல் வராமல் இருக்கவும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். எங்கள் புதிய கண்டுபிடிப்புக்களைப் பரிசோதனைக்காகத் தமிழ்நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் விவசாயிகளிடம் கொடுத்திருக்கிறோம். அவையெல்லாம் எல்லா விவசாயிகளாலும் உபயோகப்படுத்தப்படுவதற்கு இன்னும் சில வருடங்கள் பிடிக்கும். உளுந்து உற்பத்தி பத்திலிருந்து பதினைந்து சதவீதம் அதிகரிக்க ஏற்றவாறும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம்.

அறிவிப்பாளர்: அது சரி, ராமமூர்த்தி அவர்களே, வரகு என்கிறீர்களே? அதில் ஏதாவது...?

ராமமூர்த்தி: ஓ! நிறையச் செய்திருக்கிறோமே! மலைவாழ் மக்கள் பயன்படுத்தும் உணவு வரகு, சாமை போன்றவை. சில இடங்களில் காக்காச் சோளம் என்று சொல்லப்படும் மக்கட்டச் சோளத்திலும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். அவை குறைந்த காலத்திலேயே மகசூல் தரக் கூடியவை!

அறிவிப்பாளர்: உங்கள் ஆராய்ச்சி நிலையத்தைப் பொது மக்கள் வந்து பார்க்கலாமா?

ராமமூர்த்தி: வரலாமே! புதுக்கோட்டை — ஆலங்குடி சாலையில் வம்பன் என்னும் கிராமத்தில் எங்கள் ஆராய்ச்சி நிலையம் அமைந்துள்ளது. நிலையத்தின் பக்கத்திலேயே 320 ஏக்கரில் பல்வேறு பயிறு வகைப் பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டிருக்கின்றன. எப்போது வேண்டுமானாலும் விவசாயிகள் வரலாம். சந்தேகங்களைத் தெளிவுபடுத்தத் தயாராக உள்ளோம்.

அறிவிப்பாளர்: நன்றி ராமமூர்த்தி அவர்களே!

— சிநு.

கும் மேலாக ஒரு கள்ளிப் பெட்டியின் பலகையைப் பாலம் மாதிரி போட்டு, அதில் உட்காருமாறு பணித்தான் முருகேசு. இது முற்றிலும் தன்னை 'அவமானப்படுத்துவதற்காகவே செய்யப்பட்டது' என்று மனதார நம்பிய ராமுவினால் அழுகையைக் கட்டுப்படுத்தவே இயலாமல் போயிற்று.

மேலும் "வலிக்காம வெட்டிவுடறேன். ஒக்காரு தம்பி" என்று அவன் உறுதி மொழி பகன்றது வேறு அவனுக்குக் கடுப்பாக இருந்தது. இந்த விவகாரம் எதையுமே கண்டு கொள்ளாமல் அப்பா தினத்தந்தியில் சிந்துபாத் படித்துக் கொண்டிருந்த விதம் அவனைக் கொஞ்சம்கூடத் திருப்திப்படுத்தவேயில்லை.

முருகேசு தனது கடமையைச் செவ்வனே செய்யத் தொடங்கினான். 'கர்ரெக்.... கர்ரெக்...' என்ற சத்தத்துடன் மெஷின் காதுக்குப் பக்கத்தில் போனபோதெல்லாம் உயிரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் ராமு. பயத்தில் கண்ணை இறுக்க மூடிக் கொண்டாலும் பிரும்மாண்டமான முடி வெட்டும் மெஷின் ஒன்று அவனைத் துரத்திக் கொண்டு வருவது போலக் கண்ணுக்குள் தெரிந்தது. அதன் பெரிய க்கைப்பிடி மேல் கணக்கு வாத்தியார் சீனிவாசன் உட்கார்ந்து ஓட்டிக் கொண்டு வருவது போல் உணர்ந்தான். தொடர்ந்து அந்தக் காட்சியைப் பார்க்கப் பயமாக இருந்ததால் சட்டென்று விழித்துக் கொண்டான்.

'அப்பா என்ன செய்கிறார்' என்று பார்ப்பதற்காகலேசாகத்திரும்பியபோது "கம்முனு இரு. இல்லாட்டி கத்தி காதை வெட்டிடும்" என்று முருகேசு எச்சரிக்கை செய்யவே, 'ஓ' என்று அழத் தொடங்கி அந்தக் களேப்பிலேயே தூங்கியும் போனான் ராமு.

மறுபடியும் கண் விழித்துப் பார்த்த போது, 'கட்டிங்' சமாசாரமெல்லாம் முடிந்து போயிருந்தது. கழுத்தில் ரொம்ப வாசனையாகப் பவுடரெல்லாம் பூசியிருந்தது. "இந்தாடா பையா..." என்று ஒரு கார் பொம்மையைக் கொடுத்தான் முருகேசு. "தம்பி துபாயிலிருந்து வாங்கியாந்தான்" என்று அப்பாவிடம் பெருமையாகச் சொன்னான்.

அந்தப் பொம்மை ராமுவுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. 'இந்தச் சலூன்காரர் தான் எத்தனை நல்லவர்' என்று நினைத்துக் கொண்டான்.

"இன்னும் எவ்வளவு நாள் கழிச்சு முடி வெட்டணும்ப்பா?" — அப்பாவை விசாரித்தான்.

"ரெண்டு மாசம்."

"ரெண்டு மாசம்னா?"

"அறுபது நாள்."

'அடேயப்பா இன்னும் ரொம்ப நாள் கழிச்சுத்தான் முடி வெட்டணும்' என்ற சந்தோஷத்தில் சைக்கிளை நோக்கிக் குதித்துக் கொண்டு ஓடினான் ராமு.

---

# தேவை ஒரு தேர்வு மையம்!



1973ல் தொழிற் கல்வி வாரியம் வந்த பிறகு, தட்டெழுத்து, சுருக்கெழுத்து, கணக்கியல் பாடங்களை அவர்கள் நடத்தி வருகின்றனர். இதில் தட்டெழுத்து தமிழ் ஆங்கிலம் ஆகிய இரண்டுக்கும் புதுக்கோட்டையிலேயே தேர்வு மையம் வைக்கிறார்கள். ஆனால் சுருக்கெழுத்தைப் பொறுத்தவரை ஆங்கிலம்கீழ்நிலைக்குமட்டும் தான் இங்கே தேர்வு மையம். இடைநிலை மேல்நிலை (ஆங்கிலம்) மற்றும் தமிழ் சுருக்கெழுத்துத் தேர்வுகளை எழுத வேண்டுமென்றால், திருச்சியில் உள்ள துவாக்குடிக்கும் தஞ்சை அருகேயுள்ள வல்லத்திற்கும்தான் செல்ல வேண்டும்.

புதுக்கோட்டையில் நம்மைச் சந்தித்த மாணவிகள் குழு, இந்தக் குறைகளைச் சொல்லி, "சாதாரணமாக ஓரிடத்தில் தேர்வு மையம் வைக்க வேண்டுமானால் இருபது மாணவிகளாவது இருக்க வேண்டும். ஆனால் நாங்களோ நாற்பது பேர் இருக்கிறோம். அப்படியிருந்தும் — புதுக்கோட்டை ஒரு மாவட்டத் தலைநகராக இருந்தும் இங்கே தேர்வு மையம் இல்லை. அதனால் எங்களுக்குச் செலவும் சிரமமும் அதிகரிக்கிறது. அது காரணமாகவே பல பெற்றோர் தங்கள் பெண்களைப் படிக்க வைக்க அஞ்சுகிறார்கள்..." என்று முறையிட்டது. தொழிற் கல்வி வாரியம் இதுபோன்ற கோரிக்கைகளை அலட்சியப் படுத்துவதையே தொழிலாகக் கொள்ளாமல் இருக்கட்டும்.

— சிவன்




# முன்னேறத் தேவையான முக்கிய குணங்கள்

பன்னிரண்டு வயதுப் பெண்ணை ஒரு பையன் துரத்திக் கொண்டிருந்தான். இதைக் கண்ட பெண்ணின் தந்தை அந்தப் பையனைப் பார்த்து, ''ஏன் துரத்துகிறாய், அவளை?'' என்று கேட்டார்.

''என்னைக் கிள்ளிவிட்டாள்!''

தன் பெண்ணை நிறுத்திக் கேட்டார்.

''ஏன் அம்மா அவனைக் கிள்ளினாய்?''

அங்குமிங்கும் பார்த்துவிட்டு அவள் சொன்னாள்: ''அவன் என்னைத் துரத்த வேண்டும் என்பதற்காகத்தான்!''

சிலர் சில விஷயங்களைத் தெரிந்து, உணர்ந்து, காரியத்துடன் செய்கிறார்கள். சிலர், ''ஏன் விஷயங்கள் இப்படி நடக்கின்றன?'' என்ற உணர்வு ஏதுமின்றிக் காரியத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

''வாழ்க்கையை நாம் தெரிந்துதான் வாழ்கிறோமா? தெரிந்து, உணர்ந்து, ஒரு பலனை எதிர்பார்த்துத்தான் வாழ்கிறோமா? அல்லது ஏதோ நேர்கிற சம்பவங்களுக்கு ஈடு கொடுக்கும் வகையில் வாழ்வை ஓட்டிக் கொண்டிருக்கிறோமா?

சிந்தனைக்குரிய கேள்வி; நம்மைச் சுய சோதனைக்குட்படுத்தும் கேள்வி. கத்தோலிக்கப் பாதிரியார்களும் கன்னி மாதாக்களும் ஆண்டுக்கொரு முறை தனி இடத்திற்குச் சென்று சுய சோதனை செய்து கொள்வதை **Retreat** என்று சொல்வார்கள். அப்படி அடிக்கடி நாமும் சுயசோதனை செய்து கொள்வது நல்லது.

எனது வாசகர் ஒருவர் எழுதி இருந்தார். ''வாழ்வை நாம் விரும்பும் வண்ணம் அமைத்துக் கொள்ள ஒரு பத்துக் குணங்கள் மிகவும் அவசியம் என்று சொல்வீர்களா? அப்படியானால் அவற்றைக் குறிப்பிட்டு எழுத முடியுமா?'' என்று கேட்டிருந்தார்.

இப்போது நான் சுயசோதனையில் இறங்கினேன். என் அனுபவங்களை, உலக நடப்புகளை, நான் படித்தவற்றை, வீர வரலாறுகள் காட்டும் உண்மைகளைப் பற்றி யோசித்துப் பார்த்தேன்.

ஒரே வாக்கியத்தில் கூற வேண்டுமானால், ''வாழ்வின் தாத்பரியமே 'நல்லெண்ணம்' என்ற ஒரு சொல்லில் அடங்கி இருக்கிறது'' என்று நிச்சயத்துடன் கூறலாம். அன்றிலிருந்து இன்றுவரை எல்லா மதங்களும் உபதேசிக்கும் வேத நூல்களின் சாரத்தை நாம் பிழிந்தெடுத்தோமானால் மிஞ்சும் ஒரே வார்த்தை 'அன்பு' என்ற ஒன்றுதான். அன்பின் மாற்றுப் பெயர்தான் நல்லெண்ணம்; அன்பின் துவக்க இடம்தான் நல்லெண்ணம்.

ஆனால் அன்பு என்பது பல வடிவங்களை எடுக்கிறது. அன்பு காரணமாகவே தந்தை ஆத்திரமடைந்து மகனிடம் ஏகமாக இரைந்து கத்துவதைக் காண்கிறோம். சமுதாயத்தின் மீது உள்ள அன்பு காரணமாகவே காந்திஜி தம்மை வருத்திக் கொண்டார்; உண்ணாவிரதம் மேற் கொண்டார். பசியால் வாடும் குழந்தையிடம் உள்ள அன்பு காரணமாக



ஏழைத் தாய் திருடக் கூடக் கூடும்.

எனவே அன்பு என்பது நமது வாழ்க்கையின் ஒவ்வொரு செயலுக்கும் அடிப்படையாக அமைய வேண்டும் என்று கூறலாமே யொழிய அன்பு மட்டுமே போதாது. அன்பை மட்டும் உணர்ந்தும் உணர்த்திக் கொண்டும் இருந்தால் வாழ்க்கையில் முன்னேறிவிட மாட்டோம். வேறு சில குண நலன்களும் தேவை; அவை என்ன?

நான் வாழ்வுக்கு வேண்டிய முக்கிய குணங்களைப் பற்றி இப்படி யோசித்துக் கொண்டிருந்தபோது என் நண்பர் பரஞ்சோதி வந்தார். பரஞ்சோதி மனவியல் படித்தவர். பரஞ்சோதி கூறினார்: ''மிகவும் படித்த அமெரிக்கரை ஒரு செமினாரின் போது சந்தித்தேன். இதே கேள்வியைக் கேட்டேன். அவர் கூறினார்: 'வாழ்வில் ஒரு மனிதனுக்கு **integrity** வேண்டும். சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவான் என்று பிறரால் போற்றப்படும் குணங்களை அவன் வளர்க்க வேண்டும்.'''



சிறிது நேரம் எங்களிடையே அமைதி நிலவியது. நாங்கள் இருவரும் அவர் சொன்ன அந்த உண்மையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தோம். கொடுத்த வாக்குறுதியை மீறாத வாய்மை அவசியம்தான். ஆனால் வாழ்க்கை வளம் பெற அதுமட்டும் போதுமா?

மீண்டும் பரஞ்சோதி பேசத் துவங்கினார். ''இந்த விஷயங்களைப் பற்றி நானும் தீவிரமாக யோசித்திருக்கிறேன். எல்லாவற்றையும் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் மூன்று விஷயங்களைக் குறிப்பிடுவேன். அறிவு, மனோபாவம், செயல்.''

எனக்கு உற்சாகம் பிறந்தது. ஆங்கிலத்தில் இதையே **Awareness, Attitude and Action** என்று கூறலாம்.

விஷயங்கள் ஏதும் தெரியாதபோது நமக்கு ஒரு பயம் ஏற்படுகிறது. நமக்குப் பரிச்சயமில்லாத ஊருக்குப் போகும்போது ஒரு வகை தயக்கம், அச்சம் ஏற்படுகிறது. அவர்கள் பேசும் மொழி தெரியாத இடத்தில் நாம் போகும்போது ஒருவகை பயம் ஏற்படுகிறது. நமக்குப் புரியாத ஒரு யந்திரத்தில் கோளாறு ஏற்படும்போது, ஏன் என்ன என்று புரியாததினால் நமக்கு ஒரு கிலேசம் ஏற்படுகிறது.

அறிவுதான் நமது பயத்தைப் போக்குகிறது. ஊரைப் பற்றிய அறிவு, யந்திரத்தைப் பற்றிய அறிவு நமக்கு வந்தவுடன் அவற்றை எளிதாக நாம் கையாளுகிறோம். அறிவு நமக்குத் தைரியத்தைக் கொடுக்கிறது. ஒரு தெளிவைத் தருகிறது. மருத்துவம் கிராமத்தில் பரவாதபோது காலரா, பிளேக் என்றால் மக்கள் பயந்தார்கள். ஆங்கில மருத்துவ அறிவு நம் பயத்தைப் போக்கிவிட்டது. அதனால்தான் அறிவை மகத்தான சக்தி என்று குறிப்பிடுகிறார்கள். வாழ்வுக்கு இது அவசியம்.

இரண்டாவது நமது மனோபாவம். ஒரு விஷயத்தை நம்மால் முடியாது என்று அழுது கொண்டே எடுத்தோமானால் — நம் தலையில் கட்டிவிட்டார்களே என்று நொந்து கொண்டே செய்தோமானால் அது தோற்றுப் போகும் சாத்தியம் தொண்ணூறு சதவீதத்துக்கு மேல். மாறாக, ''இது என்ன பிரமாதம்! வெளுத்துக் கட்டிவிடலாம்!'' என்று உற்சாகமாக ஊரைக் கூட்டினோமானால், காரியம் துவங்குவதற்கு முன்பே வெற்றியாய் அமையும்!

வாழ்வை நாம் உற்சாகமாகவும் வாழலாம். வருத்தப்பட்டு அழுது கொண்டும் வாழலாம். அது நம் முன் உள்ள வாய்ப்பு. நாம் உற்சாகமாகப் பேசினால் எதிரில் இருப்பவர் உற்சாகமடைகிறார். மீண்டும் உங்களுடன் பேசப் பழக ஆசைப்படுகிறார். அழுது கொண்டோ, அல்லது அதிகாரத்துடனோ, ஆணவத்துடனோ பேசும்போது எதிரில் உள்ளவர்களை இழக்கிறீர்கள். எந்த நல்ல குதிரையையும் சரி, நீங்கள் உற்சாகமில்லாமல் விற்க முயன்றீர்களானால் வாங்குபவர்களுக்குச் சந்தேகம் வந்துவிடும். வாழ்வில் உற்சாகமான மனோபாவத்தை எதிலும் கடைப்பிடிக்க முயல வேண்டும்.

மூன்றாவதாகச் செயல். எதையும் செய்தால் ஒழிய பலன் விளையாது. நமது நாட்டில் ''மந்திரத்தால் மாங்காய் விழும்!'' என்று நம்புபவர்கள் அதிசயங்களை எதிர்பார்ப்பவர்கள், லாட்டரிச் சீட்டை நம்பி வாழ்பவர்கள் அதிகமோ என்றொரு சந்தேகம் எனக்கு. நாட்டில் ஊழல், லஞ்சம், அநியாயம் அதிகமாகிவிட்டது என்று புலம்பும் அளவுக்கு, 'இந்த உபயோகமற்ற அரசாங்கத்தை நாம் தூக்கி எறிய வேண்டும்' என்று கருதிச் செயல்படும் திறன் நம் மக்களுக்கு இல்லை. செயல்கள்தான் சாதனைகளை விளைவிக்குமே தவிர, வெறும் ஆசைகள் சாதிக்காது; வெறும் வாய்ப் பேச்சு எதையும் சாதிக்காது. பகவத் கீதையைப் படித்தீர்களானால் கருமம், செயல் என்று செயலைப் பற்றிய விளக்கம்தான் அது. நீதியை நிலைநாட்ட பாண்டவர்கள் போரிடவில்லை என்றால் — வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு வேகமாகச் செல்லும் தேரில் புறப்படவில்லை என்றால் வெற்றி எப்படி வந்திருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

இவ்வுலகில் இன்று நாம் பார்க்கும் இத்தனை பொருட்களும், உணவு, உடை, வீடு, கார், டெலிபோன், விமானம், டெலிவிஷன் என்ற இத்தனை பொருட்களும் மனிதனின் செயல் திறத்தால் விளைந்த விஷயங்கள்; வெறும் ஆசையால் மட்டுமல்ல. இதை நீங்கள் சொல்ல விரும்பினால் தலையிலடித்துச் சொல்லுங்கள்! கன்னத்தில் அறைந்து சொல்லுங்கள்!

தமிழ்ச் சமுதாயம் தன் பயத்தைப் போக்கி, சுயநலத்தையும் சுய வாழ்வு வாழ்வதையும் மீறித் தியாக உள்ளத்துடன், செயல் புரிய முன்னுக்கு வந்தால் ஒழிய அதற்கு விமோசனம் கிடையாது. நமக்குத் தெளிவான அறிவு வேண்டும், முடியும் என்ற உற்சாகமான மனோபாவம் வேண்டும். பலன் விளைவிக்கும் செயல்புரிய நாம் முன் வர வேண்டும்.

இவ்வாறெல்லாம் தமது கருத்துக்களைக் கூறி நிறுத்தினார் டாக்டர் பரஞ்சோதி. பிட்டுக்கு மண் சுமந்த கதையில் இறைவன் மேல் அடித்த அடி கரிரென்று எல்லோருக்கும் விழுந்ததைப்போல, பரஞ்சோதியின் அடி என் மீது விழுந்தது! உங்கள் மீது?

— டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# K.N.S. சிவம்
# இண்வெஸ்ட்மெண்ட்ஸ்



## உங்களுக்கு வழங்கும் பண்டிகைக் கால சிறப்பு வெகுமதிகள்

### 1-1-87 முதல் 15-2-87 வரை

| சிறப்பு வெகுமதிகள் | | |
|---|---|---|
| வைப்பு நிதி | 5 வருடம் | பிளாட்டினம் |
| Rs. 25,000 | 1 சவ்ரன் தங்க நாணயம் | ½ சவரன் தங்க நாணயம் |
| Rs. 15,000 | ½ சவரன் தங்க நாணயம் | ¼ சவரன் தங்க நாணயம் |
| Rs. 10,000 | ¼ சவரன் தங்க நாணயம் | 1 HMT கைக் கடிகாரம் |
| Rs. 5,000 | 1 HMT கைக் கடிகாரம் | வெள்ளி குத்து விளக்கு |

(இச் சலுகை 15-2-87 வரை மட்டுமே)

நிலையான வைப்பு நிதி திட்டம் :-

| 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் | 5 வருடம் |
|---|---|---|---|
| 20% | 21% | 22% | 24% |

கூடுதல் போனஸ்

வட்டி 2%

வங்கி வைப்பு நிதி திட்டம் :-

| 5 வருடம் | 6 வருடம் | 7 வருடம் | 10 வருடம் |
|---|---|---|---|
| 18% | 19% | 20% | 24% |

(இதற்கு சிறப்பு வெகுமதி அனுமதி இல்லை)

பிளாட்டினம் வைப்பு நிதியில் உங்களுடைய முதலீடு 42 மாதங் களில் இரு மடங்காகிறது.
(பழைய திட்டம் 48 மாதங்கள்)




# K.N.S. சிவம்
## இண்வெஸ்ட்மெண்ட்ஸ்

P.P. 427934

55, ஆற்காடு ரோடு, கோடம்பாக்கம், சென்னை-600 024.

வருங்கால வளமைக்கு K.N.S. சிவம்



# பொன்னியின் செல்வன்

**சென்ற வாரம்:**

சுமார் 1,020 ஆண்டுகளுக்கு முன்னால் தென்னாட்டில் வலிமை பெற்று வளர்ந்து வந்த சோழ சாம்ராஜ்யத்தைச் சுந்தர சோழ சக்கரவர்த்தி அரசாண்டு வந்த சமயம். ஆடித் திங்கள் பதினெட்டாம் நாள். தொண்டை நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் இடையில், திருமுனைப்பாடி நாட்டின் தென் பகுதியில் தில்லைச் சிற்றம்பலத்துக்கு மேற்கே இரண்டு காத தூரத்தில் அலைகடல் போல் விரிந்து பரந்து கிடந்த வீரநாராயண ஏரியின் அழகையும், அந்த ஏரிக்கரையில் ஊர் மக்கள் பதினெட்டாம் பெருக்கைக் களிப்புடன் கொண்டாடி மகிழ்வதையும் பார்த்தபடி குதிரை மீது பிரயாணம் செய்கிறான் வாணர்குல வீரன் வந்தியத் தேவன். இளவரசர் ஆதித்த கரிகாலர் ஆணைப்படி கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் இரவு தங்கிவிட்டு மறுநாள் பிரயாணத்தைத் தொடர இருக்கிறான். வீரநாராயண விண்ணகரக் கோயிலை நெருங்குகையில், 'சைவம் பெரிதா, வைணவம் பெரிதா?' என்று வாதம் எழும் கோஷ்டிக்கு நடுவில் வைணவ பக்தரான ஆழ்வார்க்கடியான் நம்பியைச் சந்திக்கிறான் வந்தியத்தேவன். அச்சமயம், சோழநாட்டுத் தானியப் பண்டார நாயகர் பழுவேட்டரையர் தம் பரிவாரங்களுடன் அவ்வழி செல்கிறார். பரிவாரத்தோடு வந்த மூடிய சிவிகையின் திரை விலக்கப்பட்டு ஓர் அழகிய பெண்ணின் முகம் தெரிகிறது. அப்பெண் வந்தியத் தேவனுக்கு அருகே நின்றிருக்கும் ஆழ்வார்க்கடியானைப் பார்த்துக் 'கிறீச்' சிட்டு விட்டு, சிவிகைத் திரையை மூடிக் கொள்கிறாள். இதைக் கவனிக்கும் வல்லவரையனின் உள்ளத்தில் காரணம் விளங்காத திகைப்பும் அருவருப்பும் ஏற்படுகின்றன.

## மூன்றாம் அத்தியாயம்

## விண்ணகரக் கோயில்

**அமரர் கல்கி**

சில சமயம் சிறிய நிகழ்ச்சியிலிருந்து பெரிய சம்பவங்கள் விளைகின்றன. வந்தியத் தேவன் வாழ்க்கையில் அத்தகைய ஒரு சிறிய நிகழ்ச்சி




இப்போது நேர்ந்தது.

சாலையோரத்திலே நின்று பழுவேட்டரையரின் பரிவாரங்கள் போவதை வந்தியத் தேவன் பார்த்துக் கொண்டிருந்தான் அல்லவா? அவன் நின்ற இடத்துக்குச் சற்று தூரத்திலேயே அவனுடையகுதிரைநின்றுகொண்டிருந்தது.

பழுவேட்டரையரின் ஆட்களிலே கடைசியாகச்சென்றசிலரின்பார்வை அக்குதிரையின் மீது சென்றது.

"அடே! இந்தக் குருதையைப் பாரடா!" என்றான் ஒருவன்.

"குருதை என்று சொல்லாதேடா! குதுரை என்று சொல்!" என்றான் இன்னொருவன்.

"உங்கள் இலக்கோண ஆராய்ச்சி இருக்கட்டும்; முதலில் அது குருதையா அல்லது கழுதையா என்று தெரிந்து கொள்ளுங்கள்!" என்றான் இன்னொரு வேடிக்கைப் பிரியன்.

"அதையும் பார்த்துவிடலாமடா!" என்று சொல்லிக் கொண்டு அந்த ஆட்களில் ஒருவன் குதிரையை அணுகி வந்தான். அதன் மேல் தாவி ஏற முயன்றான். ஏறப் பார்க்கிறவன் தன் எஜமானன் அல்ல என்பதை அந்த அறிவுக் கூர்மையுள்ள குதிரை தெரிந்து கொண்டது. அந்த வேற்று மனிதனை ஏற்றிக் கொள்ள மாட்டேன் என்று முரண்டு பிடித்தது!

"இது பொல்லாத குதிரையடா! இதன்பேரில் நான் ஏறக் கூடாதாம்!

பரம்பரையான அரச குலத்தவன்தான் இதன்மேல் ஏறலாமாம். அப்படியென்றால், தஞ்சாவூர் முத்தரையன் திரும்பி வந்துதான் இதன்மேல் ஏற வேண்டும்!'' என்று அவன் சமத்காரமாய்ப் பேசியதைக் கேட்டு மற்ற வீரர்கள் நகைத்தார்கள்.

ஏனென்றால், தஞ்சாவூர் முத்தரையர் குலம் நசித்துப்போய் நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இப்போது சோழர்களின் புலிக்கொடி தஞ்சாவூரில் பறந்து கொண்டிருந்தது.

''குதிரையின் எண்ணம் அவ்விதம் இருக்கலாம். ஆனால் என்னைக் கேட்டால், செத்துப் போன தஞ்சாவூர் முத்தரையனைக் காட்டிலும் உயிரோடிருக்கும் தாண்டவராயனே மேல் என்பேன்!'' என்றான் மற்றொரு வீரன்.

''தாண்டவராயா! உன்னை ஏற்றிக் கொள்ள மறுக்கும் குதிரை நிஜக் குதிரைதானா என்று பார்த்துவிடு! ஒரு வேளை, பெருமாளின் திருநாளுக்கு வந்த பொய்க்கால் குதிரையாயிருந்தாலும் இருக்கலாம்!'' என்றான் மற்றொரு பரிகாசப் பிரியன்.

''அதையும் சோதித்துப் பார்த்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு குதிரை மீது ஏறப் போன தாண்டவராயன் அதனுடைய வாலை முறுக்கினான். ரோஸமுள்ள அக் குதிரை உடனே பின்னங்கால்களை நாலு தடவை விசிறி உதைத்துவிட்டு ஓட்டம் பிடித்தது.

''குருதை ஓடுகிறதடா! நிஜக் குருதைதானடா!'' என்று அவ்வீரர்கள் கூச்சலிட்டு, ''உய்! உய்!'' என்று கோஷித்து ஓடுகிற குதிரையை மேலும் விரட்டினார்கள்.

**கு**திரை திருநாள் கூட்டத்துக் கிடையே புகுந்து ஓடிற்று. ஜனங்கள் அதன் காலடியில் மிதிபடாமலிருப்பதற்காகப் பரபரப்புடன் அங்குமிங்கும் நகர்ந்து கொண்டார்கள். அப்படியும் அவர்களில் சிலர் உதைபட்டு விழுந்தார்கள். குதிரை நெறி கெட்டு வெறி கொண்டு ஓடியது.

இவ்வளவும் வந்தியத் தேவன் கண்ணெதிரே அதி சீக்கிரத்தில் நடந்து விட்டது. அவனுடைய முகத் தோற்றத்திலிருந்து குதிரை அவனுடைய குதிரை என்பதை ஆழ்வார்க்கடியான் கண்டு கொண்டான்.

''பார்த்தாயா தம்பி அந்தப் பழுவூர்த் தடியர்கள் செய்த வேலையை! என்னிடம் நீ காட்ட வந்த வீரத்தை அவர்களிடம் காட்டுவதுதானே?'' என்று குத்திக் காட்டினான்.

வந்தியத் தேவனுக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. எனினும் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையைக் கடைப்பிடித்தான். பழுவூர் வீரர்கள் பெருங் கூட்டமாயிருந்தனர். அவ்வளவு பேருடன் ஒரே சமயத்தில் சண்டைக்குப் போவதில் பொருள் இல்லை. அவர்கள் இவனுடன் சண்டை போடுவதற்காகக் காத்திருக்கவும் இல்லை. குதிரை ஓடியதைப் பார்த்துச் சிரித்துவிட்டு, அவர்களும் விரைந்து மேலே நடந்தார்கள்.

குதிரை போன திசையை நோக்கி வந்தியத் தேவன் நடந்தான். அது கொஞ்ச தூரம் ஓடிவிட்டுத் தானாகவே நின்றுவிடும் என்று அவனுக்குத் தெரியும். ஆகையால் அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. பழுவேட்டரையரின் அகம்பாவம் பிடித்த ஆட்களுக்கு என்றைக்காவது ஒருநாள் நன்றாகப் புத்தி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் அழுத்தமாகப் பதிந்தது.

**பு**ளியந்தோப்புக்கு அப்பால், ஜன சஞ்சாரமில்லாத இடத்தில் குதிரை சோகமே வடிவாக நின்று கொண்டிருந்தது. வந்தியத் தேவன் அதன் அருகில் சென்றதும் குதிரை கனைத்தது. 'ஏன் என்னைவிட்டுப் பிரிந்து சென்று, இந்தச் சங்கடத்துக்கு உள்ளாக்கினாய்?' என்று அந்த வாயில்லாப் பிராணி குறை கூறுவது போல் அதன் கனைப்புத் தொனித்தது. வந்தியத் தேவன் அதன் முதுகைத் தட்டிச் சாந்தப்படுத்தினான். பிறகு அதைத் திருப்பி அழைத்துக் கொண்டு சாலைப் பக்கம் நோக்கி வந்தான். திருவிழாக் கூட்டத்தில் இருந்தவர்கள் பலரும் அவனைப் பார்த்து, ''இந்த முரட்டுக் குதிரையை ஏன் கூட்டத்தில் கொண்டு வந்தாய், தம்பி! எத்தனை பேரை அது உதைத்துத் தள்ளிவிட்டது?'' என்றார்கள்.

''இந்தப்பிள்ளை என்ன செய்வான்? குதிரைதான் என்ன செய்யும்? அந்தப் பழுவேட்டரையரின் முரட்டு ஆட்கள் அல்லவா இப்படிச் செய்துவிட்டார்கள்?'' என்று இரண்டொருவர் சமாதானமும் சொன்னார்கள்.

ஆழ்வார்க்கடியான் இன்னமும் சாலையில் காத்துக் கொண்டு நின்றான். 'இதேதடா சனியன்? இவன் நம்மை விடமாட்டான் போலிருக்கிறதே!' என்று எண்ணி வந்தியத் தேவன் முகத்தைச் சுளுக்கினான்.

''தம்பி! நீ எந்தப் பக்கம் போகப் போகிறாய்?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

''நானா? கொஞ்சம் மேற்குப் பக்கம் சென்று, பிறகு தெற்குப்பக்கம் திரும்பி, சிறிது கிழக்குப் பக்கம் வளைத்துக் கொண்டு போய், அப்புறம் தென் மேற்குப் பக்கம் போவேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''அதையெல்லாம் நான் கேட்கவில்லை. இன்று ராத்திரி எங்கே தங்குவாய் என்று கேட்டேன்.''

''நீ எதற்காக அதைக் கேட்கிறாய்?''

''ஒருவேளை கடம்பூர்ச் சம்புவரையர் அரண்மனையில் நீ தங்குவதாயிருந்தால், எனக்கு அங்கே ஒரு வேலை இருக்கிறது....''

''உனக்கு மந்திர தந்திரம் தெரியுமா, என்ன? நான் கடம்பூர் அரண்மனைக்குப் போகிறேன் என்பதை எப்படி அறிந்தாய்?''

''இதில் என்ன அதிசயம்? இன்றைக்குப் பல ஊர்களிலிருந்தும் பல விருந்தாளிகள் அங்கே வருகிறார்கள். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் அங்கேதான் போகிறார்கள்.''

''மெய்யாகவா?'' என்று வந்தியத் தேவன் தன் வியப்பை வெளியிட்டான்.

''மெய்யாகத்தான்! அது உனக்குத் தெரியாதா, என்ன? யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் எல்லாம் கடம்பூர் அரண்மனையைச் சேர்ந்தவைதான். பழுவேட்டரையரை எதிர் கொண்டு அழைத்துப் போகின்றன. பழுவேட்டரையர் எங்கே போனாலும் இந்த மரியாதையெல்லாம் அவருக்கு நடைபெற்றேயாக வேண்டும்.''

வந்தியத் தேவன் மௌன யோசனையில் ஆழ்ந்தான். பழுவேட்டரையர் தங்குமிடத்தில் தானும் தங்குவதென்பது எளிதில் கிடைக்கக் கூடிய வாய்ப்பு அல்ல. அந்த மாபெரும் வீரருடன் பழக்கம் செய்து கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தாலும் கிடைக்கலாம். ஆனால் அவருடைய முரட்டுப் பரிவாரங்களுடன் ஏற்பட்ட அநுபவம் இன்னும் அவனுக்குக் கசந்து கொண்டிருந்தது.

''தம்பி! எனக்கு ஓர் உதவி செய்வாயா?'' என்று ஆழ்வார்க்கடியான் இரக்கமான குரலில் கேட்டான்.

''உனக்கு நான் செய்யக் கூடிய உதவி என்ன இருக்க முடியும்? இந்தப் பக்கத்துக்கே நான் புதியவன்.''

''உன்னால் முடியக் கூடிய காரியத்தையே சொல்வேன். இன்றிரவு என்னைக் கடம்பூர் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போ!''

''எதற்காக? அங்கே யாராவது வீர சைவர் வருகிறாரா? 'சிவன் பெரிய தெய்வமா? திருமால் பெரிய தெய்வமா?' என்று விவாதித்து முடிவு கட்டப் போகிறீர்களா?''

''இல்லை, இல்லை. சண்டை பிடிப்பதே என் வேலை என்று நினைக்க வேண்டாம். இன்றிரவு கடம்பூர் மாளிகையில் பெரிய விருந்து நடைபெறும். விருந்துக்குப் பிறகு களியாட்டம், சாமியாட்டம், குரவைக் கூத்து — எல்லாம் நடைபெறும். குரவைக் கூத்துப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை!''

''அப்படியிருந்தாலும், நான் உன்னை எப்படி அழைத்துப் போக முடியும்?''

''என்னை உன் பணியாள் என்று சொன்னால் போகிறது.''

வந்தியத் தேவனுக்கு முன்னால் ஏற்பட்ட சந்தேகம் வலுப்பட்டது.

''அந்த மாதிரி ஏமாற்று மோசடிக்கெல்லாம் நீ வேறு யாரையாவது பார்க்க வேண்டும். உன்னைப் போன்ற பணியாளன் எனக்குத் தேவையில்லை. சொன்னால் நம்பவும் மாட்டார்கள். மேலும், நீ சொன்னதையெல்லாம் யோசித்துப் பார்த்தால் என்னையே இன்று கோட்டைக்குள் விடுவார்களோ என்ற சந்தேகம் உண்டா

கிறது.''

''அப்படியானால், நீ கடம்பூருக்கு அழைப்புப் பெற்றுப் போகவில்லை யென்று சொல்லு.''

''ஒருவகையில் அழைப்பு இருக்கிறது. சம்புவரையர் மகன் கந்தன் மாறவேள் என்னுடைய உற்ற நண்பன். இந்தப் பக்கம் வந்தால் அவர்களுடைய அரண்மனைக்கு அவசியம் வரவேணுமென்று என்னைப் பலமுறை அழைத்திருக்கிறான்.''

''இவ்வளவுதானா? அப்படியானால் உன் பாடே இன்றைக்குக் கொஞ்சம் திண்டாட்டமாகத்தான் இருக்கும்!''

இருவரும் சிறிது நேரம் மௌனமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

''ஏன் என்னை இன்னும் தொடர்ந்து வருகிறாய்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''அந்தக் கேள்வியையே நானும் திருப்பிக் கேட்கலாம். நீ ஏன் என்னைத் தொடருகிறாய்? உன் வழியே போவது தானே?''

''வழி தெரியாத குற்றத்தினால்தான். நம்பி! நீ எங்கே போகிறாய்? ஒரு வேளை கடம்பூருக்குத்தானா?''

''இல்லை; நீதான் என்னை அங்கு அழைத்துப் போக முடியாது என்று சொல்லிவிட்டாயே? நான் விண்ணகரக் கோயிலுக்குப் போகிறேன்.''

''வீர நாராயணப் பெருமாள் சந்நிதிக்குத்தானே?''

''ஆம்.''

''நானும் அந்த ஆலயத்துக்கு வந்து பெருமாளைச் சேவிப்பதற்கு விரும்புகிறேன்.''

''ஒருவேளை விஷ்ணு ஆலயத்துக்கு நீ வரமாட்டாயோ என்று பார்த்தேன். பார்க்க வேண்டிய கோயில்; தரிசிக்க வேண்டிய சந்நிதி. இங்கே ஈசுவர முனிகள் என்ற பட்டர், பெருமாளுக்குக் கைங்கரியம் செய்து வருகிறார். அவர் பெரிய மகான்.''

''நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரே கூட்டமாயிருக்கிறதே! கோயிலில் ஏதாவது விசேஷ உற்சவம் உண்டோ?''

''ஆம்; இன்று ஆண்டாள் திரு நட்சத்திரம். ஆடிப்பதினெட்டாம் பெருக்கோடு ஆண்டாளின் திருநட்சத்திரமும் சேர்ந்து கொண்டது. அதனால் தான் இவ்வளவு கோலாகலம். தம்பி! ஆண்டாள் பாசுரம் ஏதாவது நீ கேட்டிருக்கிறாயா?''

''கேட்டதில்லை.''

''கேட்காதே! அதைக் காதினாலேயே கேட்காதே!''

''ஏன் அவ்வளவு வைஷம்யம்?''

''வைஷம்யம் இல்லை; விரோதமும் இல்லை. உன்னுடைய நன்மைக்குச் சொன்னேன். ஆண்டாளின் இனிய பாசுரத்தைக் கேட்டுவிட்டாயானால் அப்புறம் வாளையும் வேலையும் விட்டெறிந்துவிட்டு என்னைப் போல் நீயும் கண்ணன்மேல் காதல் கொண்டு விண்ணகர யாத்திரை கிளம்பி விடுவாய்!''

''உனக்கு ஆண்டாள் பாசுரங்கள் தெரியுமா? பாடுவாயா?''

''சில தெரியும்; வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார் பாசுரங்களில் சில தெரியும். பெருமாள் சந்நிதியில் பாடப் போகிறேன். வேணுமானால் கேட்டுக் கொள்! இதோ கோயிலும் வந்துவிட்டது!''

இதற்குள் உண்மையிலேயே வீர நாராயணப் பெருமாள் கோவிலை அவர்கள் நெருங்கி வந்துவிட்டார்கள்.

**வி**ஜயாலய சோழனின் பேரனான முதற் பராந்தக சோழன், 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்ற பட்டம் பெற்றவன், சோழப் பேரரசுக்கு அஸ்திவாரம் அமைத்தவன் அவனே. தில்லைச் சிற்றம்பலத்துக்கு அவன் பொன் கூரை வேய்ந்து சரித்திரப் புகழ் பெற்றவன். சோழ சிகாமணி, சூரசிகாமணி முதலிய பல விருதுப் பெயர்களோடு வீர நாராயணன் என்னும் சிறப்புப் பெயரையும் அவன் கொண்டிருந்தான்.

பராந்தகனுடைய காலத்தில் வடக்கே இரட்டை மண்டலத்து ராஷ்டிரகூட மன்னர்கள் வலிமை பெற்று விளங்கினார்கள். மானிய கேடத்திலிருந்து அவர்கள் படையெடுத்து வரக் கூடுமென்று பராந்தகன் எதிர்பார்த்தான். எனவே, தனது முதற் புதல்வனாகிய இளவரசன் இராஜாதித்தனை ஒரு பெரிய சைன்யத்துடன் திருமுனைப்

பாடி நாட்டில் இருக்கச் செய்தான். அந்தச் சைன்யத்தைச் சேர்ந்த லட்சக் கணக்கான வீரர்கள் வேலையின்றிச் சும்மா இருக்க நேர்ந்த காலத்தில் இராஜாதித்தன் ஒரு யோசனை செய்தான். குடி மக்களுக்கு உபயோகமான ஒரு பெரும்பணியை அவர்களைக் கொண்டு செய்விக்க எண்ணினான். வடகாவேரி என்று பக்தர்களாலும் கொள்ளிடம் என்று மற்றவர்களாலும் அழைக்கப்பட்ட பெருநதியின் வழியாக அளவில்லாத வெள்ள நீர் ஓடி வீணே கடலில் கலந்து கொண்டிருந்தது. அதில் ஒரு பகுதியைப் பயன்படுத்த எண்ணித் தன்வசமிருந்த வீரர்களைக்கொண்டு கடல்போன்ற விசாலமான ஏரி ஒன்றை அமைத்தான். அதைத் தன் அருமைத் தந்தையின் பெயரால் வீர நாராயண ஏரி என்று அழைத்தான். அதன் [illegible] வீர நாராயணபுரத்தை [illegible] அதில் ஒரு விண்ணகரையும் [illegible] விஷ்ணுக்கிருஹம் என்பது [illegible] விண்ணகரம் என்று [illegible] பட்டு வழங்கிற்று. ஸ்ரீமந் [illegible] மூர்த்தி நீரில் பள்ளி [illegible] மயமாக இருப்ப[illegible] எனவே, ஏரிகளைக் [illegible] காக ஏரிக்கரையை [illegible] யண மூர்த்திக்குக் கோயில் [illegible] அக்காலத்து வழக்கம். [illegible] வீர நாராயணபுர விண்ணை[illegible] வீர நாராயணப் பெருமா[illegible] கொண்டு எழுந்தருள[illegible]

அத்தகைய பெரு[illegible] லுக்குத்தான் இப்[illegible] தேவனும் ஆழ்வார்க்கடியா[illegible] ஊர்கள். சந்நிதிக்கு வந்து நின்றதும் ஆழ்வார்க்கடியான் பாட ஆரம்பித்தான். ஆண்டாளின் பாசுரங்கள் சில வற்றைப் பாடிய பிறகு நம்மாழ்வாரின் தமிழ் வேதத்திலிருந்து சில பாசுரங்களைப் பாடினான்:

"பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக் கிங்குயா தொன்று மில்லை
கலியும்கெடும்கண்டுகொள்மின்
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி
ஆடி உழி தரக் கண்டோம்!
கண்டோம் கண்டோம்
கண்டோம்
கண்ணுக்கினியன கண்டோம்
தொண்டீர் எல்லீரும் வாரீர்!
தொழுது தொழுது நின்றார்த்தும்!
வண்டார் தண்ணந் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்டான் பாடி நின்றாடிப்
பரந்து திரிகின்றன வே!"

[illegible]விதப் பாடி வந்தபோது ஆழ்[illegible]யானுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் தாரை தாரை[illegible] அவன் கன்னத்தின் வழியாக [illegible]தோடியது. வந்தியத் தேவன் [illegible]பாடல்களைக் கவனமாகவே [illegible]தான். அவனுக்குக் கண் [illegible]லும் உள்ளம் கசிந் [illegible] ஆழ்வார்க்கடியானைப் [illegible] அவன் முன்னர் கொண்டிருந்த க[illegible]து. "இவன் பரம பக்[illegible] என்று எண்ணிக் கொண்டான். [illegible] தேவனைப் போலவே கவ[illegible] அப்பாசுரங்களை இன்னும் சில[illegible]ார்கள். கோவில் முதலி[illegible] கேட்டார்கள். அர்ச்சகர் [illegible]பட்டரும் கண்ணில் நீர் மல்கி நின்[illegible]ட்டார். அவருக்கு அருகில் நின்[illegible]ண்டு அவருடைய இளம் [illegible] — பால்மணம் மாறாப் பால [illegible]வன் — கேட்டிருந்தான்.

[illegible]வார்க்கடியான் பத்துப் பாசு[illegible] பாடிவிட்டு,

"[illegible] தென்னன் குருகூர்க்
காரி மாறன் சடகோபன்
ஒலி புகழ் ஆயிரத்து இப்பத்து
உள்ளத்தை மாசறுக்குமே!"

என்று பாசுரத்தை முடித்தான்.

கேட்டிருந்த பட்டரின் குமாரனாகிய பாலகன் தன் தந்தையிடம் ஏதோ கூறினான். அவர் மல்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஐயா! குருகூர்ச் சடகோபர் என்னும் நம்மாழ்வார் மொத்தம் ஆயிரம் பாடல்கள் பாடியிருப்பதாகத் தெரிகிறதே? அவ்வளவும் உமக்குத் தெரியுமா?" என்று

போது, அவள் இதுவரை உணர்ந்திராத ஓர் இழப்புணர்ச்சியை உணர்ந்தாள்.

தந்தையும், மகளும் மௌனமாக நடந்த படி வீடு திரும்பும்போது, கனமான மௌனத்தைக் கலைத்தவள் புவனாதான். மெல்லிய குரலில், "அப்பா என் மேலே உங்களுக்குக் கோபமா?" என்று கேட்டாள்.

சுந்தரம் பெருமூச்சுவிட்டார். "உன் மேலே எனக்கு எதுக்கும்மா கோபம்?"

"பின்னே ஏம்பா பேச மாட்டேங்கறீங்க?"

"எப்படியோ போயிட்டிருந்த குடும்பம், எப்படியெல்லாமோ அலைபட்டுப் போறதேன்னு வருத்தம்மா."

"அத்தான் எப்படியும் லோகுவைத்தான் கட்டிப்பாருப்பா" அவள் பெரிய மனுஷி மாதிரி கூறினாள்.

"நடக்கும்... அந்தக் கலியாணம் நடந்திடும். என் கவலை அதில்லை புவனா. அது உன்னைப் பத்தியதுதான். நீ என் மகள் மட்டுமல்ல, என் சிஷ்யை, தோழி எல்லாம்மா. உனக்கு ஸ்ருதி கூட்டி ஸ, ப, ஸ சொல்லித் தந்தவன் நான்தான். ஆனா பாட்டுச்சொல்லித் தந்ததுமே, நீ மேடையேறிப் பாடி பணம் சம்பாதித்துப் புகழ் சம்பாதித்துப் பெரிய மனுஷி ஆகணும்னு இல்லை. ஆனாலும், உனக்குப் பாட்டால ப்ரக்யாதி வந்திருந்த துன்னா அதற்கு நான்தான் முதல்ல நின்னு சந்தோஷப்பட்டிருப்பேன். சங்கீதம் என்கிறது அப்படிப்பட்ட அனுபவம். அது குரல், இசை, நாதம், லயம், மனம், ஆன்மா என்று பல விஷயங்கள் கலந்த விஷயம். சங்கீதம் கற்றவன் உலகிலே கற்காத விஷயமில்லை. சங்கீதத்தில் இசையுமுண்டு, நடனமும் உண்டு, நாடகமும் உண்டு.

சங்கீதமே முக்கலை, நாதம் மூவெழுத்து
நாதமே முக்குணம், நாதமே முப்பொருள்
நாதம் மூவுலகாகி விரிந்து
நாதமாம் பரத்திலே லயித்தது பாரே
நாதம் பரத்திலே லயித்திடும் — அதனால்
நாதம் அறிந்திடப் பரமும் அறிந்திடலாம்

என்று நம்ம அகவற்பா சொல்கிறது. உன் குரலுக்கும், இசை ஞானத்துக்கும் நான் மெய்மறந்து தலைவணங்கறேன் புவனா."

"அப்பா, தப்பா நினைக்காதீங்க. அப்படிப் பாட்டை மதிக்கிற நீங்க ஏன்பா நான் மேடையேறிப் பாடறதை விரும்பலே?"

சுந்தரம் மெல்ல மகளின் முடியைக் கோதிவிட்டார். "நீ என்னைப் புரிஞ்சுக்கலே புவனா. கடவுள் முன் பாடு. பாட்டை வழிபாடாக்கு. கலை அறிந்த நாலு பேர் முன் கச்சேரி செய். சங்கீதத்தை ரசனையாக்கு. இசை ஞானமே இல்லாதவருக்குப் பாட்டால மகிழ்ச்சியைக் கொடு. பாட்டை அனுபவமாக்கு. எனக்குச் சம்மதம்; சந்தோஷமும்கூட. ஆனால் புவனா, திருக்குறள் படிச்சிருக்கயே... 'பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் கண் என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண்' என்று ஏன் வள்ளுவர் எழுதினார் தெரியுமா? பண்ணுக்கு இலக்கணமுண்டு. அது பாட்டுக்கு உகந்தவரை மட்டுமே பாராட்டும். அரசியல் ஆதாயத்துக்குப் பண் துதி பாடாது. அப்படி இலக்கணம் தவறிய பண்ணை நீ சங்கீதத்தால் சுவீகரிக்கக் கூடாது மகளே. உன்னிடம் நான் சொல்லக் கூடாது என்றாலும் சொல்கிறேன், குலமகள் விலைமாதாகக் கூடாதம்மா. சங்கீதம் அரசியல் மேடையில் சந்தி சிரிக்கக் கூடாது."

"சினிமாவிலேகூட சாஸ்த்ரீய சங்கீத ராகத்திலே பாடலியா?"

"பாடறாங்க. லைட் மியூசிக் போடறாங்க. சங்கீதங்கற அடிப்படைச் சக்தியை எத்தனையோ விதத்திலே உபயோகிக்கறாங்க. அது மின்சார சக்தி மாதிரி. உன் விஷயத்துலே அது போற பாதை சரியில்லை. 'ஷாக்' அடிச்சுடுமோ, என் பூ மாதிரி மகள் தாங்குவாளோன்னு பயமாயிருக்கு புவனா..."

"கவலைப்படாதீங்கப்பா. அம்மா நல்லா கவனிச்சுப்பாங்க என்னை. நானும் நல்லாப் பாடிப் பேரெடுப்பேன். ஆனா, நீங்க மட்டும் என்னோட பேசாம இருந்திடாதீங்க..."

மகள் விண்ணப்பித்தும், அவரால் சகஜமாக முடியவில்லை. அவர் எதிர்ப்பையும் மீறி அவர் தாலி கட்டிய மனைவியே வெளிக்கிளம்பியது அவரைப் பலத்த அடிக்குள்ளாக்கியது. இவ்வளவு அவமானத்தையும் தாங்கிக் கொண்டு, தமிழ்ச்செல்வனின் எக்காளப் புன்னகையைக் காணாதது போல் தலைகுனிந்து கொண்டு, மகளையும் மனைவியையும் வழியனுப்ப வேண்டுமா என்ன? அவசியமில்லை. சுந்தரம் மூடிய கதவுக்குள் அடைக்கலம் புகுந்து கொண்டார்.

வெட்கமானமற்ற கணவன், மனைவியை நடுத் தெருவில் நிறுத்தி, முடியைப் பற்றி, நாலு அறை போட்டு, தரதரவென அறைக்குள் இழுத்துப் போட்டு மிதிப்பான். கதவை மூடித் தாளிட்டுச் சிறையிடுவான். ஆனால் மானத்துக்குப் பயந்த ஆண்மகன், தானல்லவா அடங்கிப் போக வேண்டியிருக்கிறது?

அந்த இரண்டாம் வகுப்புப் பெட்டிக்கு வெளியே கட்சிக் கொடி கட்டப்பட்டிருந்தது. தலைவரின் பெயர் பல அடைமொழிகளுடன் 'வாழ்க' 'வாழ்க' என்று வாழ்த்தப்பட்டிருந்தது. ஆண்களும், பெண்களுமாக ஏற்கெனவே பலர் அந்தப் பெட்டியில் ஏறியிருந்தார்கள். தமிழ்ச் செல்வன் தன் தொண்டர்கள், ஊர்த் தோழர்களுடன் பெட்டியில்

"மத்திய அரசு திடீரென்று தபால் தந்தி கட்டணத்தை உயர்த்திவிட்டதே?"

"அரசுக்கு வர்ற புகார்க் கடிதங்களைக் குறைக்கிறதுக்குத்தான் இப்படியொரு ஐடியாவாம்!"

— காயாமொழி சவுக்கத் அலி



● ஞானம், பக்தி என்ற இரண்டில் ஒன்றை ஏற்று மற்றொன்றை நிராகரிப்பவன் ஞானியுமல்ல, பக்தனுமல்ல. ஏமாற்றும் திருடனே! ●

ஏறவும் அவனுக்கும் 'வாழ்க' கோஷம் போடப்பட்டது.

கைகுலுக்கல்கள், விசாரிப்புகள், அழைப்புகள்...புவனாவும்,ஞானமும்வியப்புடன் அனைவரையும் மாறி மாறிப் பார்த்தார்கள். தமிழ்ச்செல்வன் மனைவி பலரை இவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தாள். "நம்ம ஊர் ஓதுவார் மகள்ங்க.பிரமாதமாப் பாடுது. நம்ம கட்சிப் பாடல் எல்லாம் அது செட்டிங் தாங்க..." என்று.

"அம்மாடி... அண்ணன், அண்ணி என்று இவர்கள் எவ்வளவு மரியாதையுடனும், அன்புடனும் பழகுகிறார்கள். அதேசமயம் சிரிப்பும், பேச்சுமாக ஜாலியாகத்தான் இருக்கிறார்கள்' என ஞானம் நினைத்தாள்.

"சுருங்கனி.... சுருங்கனி..." என்று ஒருவர் துவங்க, அத்தனை பேரும் சேர்ந்து கைதட்டிக் கொண்டு கோரஸாகப் பாட்டுப் பாடினார்கள். தொடர்ந்து 'என்னடி ராக்கம்மா...'

"பாப்பா நீ பாடும்மா..." யாரோ புவனாவிடம் சொல்ல, அவள் பழக்கமில்லாத சூழலில் நெளிந்தாள். ஞானம் அவள் கையைக் கிள்ள, அவள் "தேவனே, தேவனே மக்கள் துயர் களைந்த எங்கள் தலைவனே..." என்று புத்தகத்தில் படித்திருந்த பாடலைத் துவங்க, அனைவரும் சேர்ந்து கை தட்டினர். மறுபடியும் 'வாழ்க வாழ்க' என்று ஒலித்தனர்.

பாடிக் களைத்தவர்களுக்குப் பலகாரம் வந்தது. இலைச் சருகில் பலகாரத்தை ஏந்தியபடி, பேசிச் சிரித்தபடி சாப்பிடுவது, புவனாவுக்கு ஐந்தாம் வகுப்பில் திருவையாறுக்கு எக்ஸ்கர்ஷன் சென்றதை நினைவுபடுத்தியது.

"இன்னும் சாப்பிடு, வெட்கப்படாதே" யாரோ இன்னும் இரண்டு இட்லியைக் கட்டாயமாகப் போட்டார்கள்.

"நீங்க என்னம்மா சாப்டறீங்க?"

"இட்லி போதுங்க..." ஞானம் பவ்யமாகப் பதிலிறுத்தாள்.

"சரி, சாப்பிடுங்க. குடிக்க..."

"காப்பி போதுங்க.

"காப்பியா?" கேட்டவர் சிரித்தார். "காப்பி சாப்பிட்டுத் தாகம் தீருமா? வாங்க, வாங்க. ஏதாவது தாக சாந்திக்கு எடுத்துக்கலாம். தங்கச்சி, இந்த அம்மாவுக்கு ஏதாவது குடிக்கக் குடும்மா."

நிமிர்ந்தபோதுதான் ஞானத்துக்குப் பலரும் கையில் ஏந்தியிருக்கும் பொன் நிறத் திரவத்தின் வாசம் புதுமையாகப் பட்டது. புலன் விழித்தபோது, தற்காப்பு உணர்வு எழுந்தது. பெண்கள் கூடவா, இப்படி.... புத்தி சொல்ல வேண்டிய அண்ணன்காரங்களே ஊத்தித் தர்றாங்களே... இதெல்லாம் தவறான காரியங்களாயிற்றே...

ஒன்ற முடியாத சூழலில், ஏற்க முடியாத செயல்களின் நடுவே, ஞானம் அருவருப்பை அடக்க மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)



# ஒரு இனிய உதயம்

எடுத்தவுடன் மேஜரை டிஷ்யூம் டிஷ்யூம் செய்துவிடுகிறார்கள். அப்படிக் கொன்றவர் யார் என்று அறிந்து அவரை மடக்குவதற்காக முரட்டு விஜய்காந்தைத் தேர்ந்தெடுத்து, கராத்தே, உன்னைப் பிடி என்னைப் பிடி மல்யுத்தம், குதிரையேற்றம், மோட்டார் பைக்கேற்றம் எல்லாம் கற்றுக் கொடுத்து — கொக்கு தலையில் வெண்ணெய். இந்தப் படத்தில் ஸ்டன்ட் மாஸ்டரே ஏகப்பட்ட ஃபிலிமை ஏப்பம் விட்டிருக்கிறார். தொட்டதற்கெல்லாம் சண்டை.

அப்புறம் நாட்டியம் கற்ற அமலாவின் பாட்டும் பரதமும்.

தபால்காரர் தவறுதலாகத் 'தவிடு யார்' என்று கேட்க, கோப ஜனகராஜ் 'நீ தவிடு, உங்கப்பன் தவிடு' என்று பரம்பரையை இழுப்பதும், 'ஒரு மணி ஆர்டர் வந்திருக்கு' என்று தபால்காரர் முடித்தவுடன், அப்படியே தடால் என்று வாபஸ் வாங்கி, 'நான் தவிடு, எங்கப்பன் தவிடு' என்று ஒப்பிப்பதும் — செமை ஹி ஹி!

குதிரை ரேஸ், குதிரையை மோட்டார் பைக்கில் விரட்டும் ரேஸ் என்று சகட்டுமேனிக்கு காமிராவும் இரைக்க இரைக்க ஓடியிருக்கிறது.

'யார் அழைத்ததோ பௌர்ணமி நிலவே', 'அன்பே என் அன்பே' பாடல்களை இசையமைத்திருப்பது மனோஜ்—கியான். இளையராஜாவுக்கு எதிர்ச் சவால் விட ஆரம்பித்திருக்கிறார்கள், புது இசையமைப்பாளர்கள் என்ற கூற்றில் உண்மை ஓரளவு இருக்கிறது.

விஜயகுமார் கடைசியில் நல்லவராமே! கொஞ்சம் எதிர்பாராத திடுக். விஜய்காந்த் சண்டை சச்சரவு என்று ஒப்பேற்றிவிட்டார்.

கதையையும் லாஜிக்கையும் மறந்துவிட்டால் — ஊஹூம்! அப்புறம் என்ன இருக்கிறது?

— ஜெயமன்மதன்

கடவுள்: ஒவ்வொரு மதமும் ஒரு முத்து என்றால் அவற்றைக் கோர்த்த மாலையாக்குகிற நூல்

## புதுக்கவிதைப் போட்டி — 4

### முதல் பரிசுக் கவிதை

டெலிவிஷனோ டில்லி விஷனோ!
சொல்லாதே அதன் பேரை!
பாம்பின் பல் விஷம் கக்கும், அன்றே
கொல்லும்!

ஆனால் டெலி விஷத்தின் ஒளிக் கதிர்கள்
அணு அணுவாய் நின்று கொல்லும்.
மாலையில் உடற்பயிற்சி, பாடங்கள் படித்தல்
மனைவி மக்களுடன் உறவாடும் மகிழ்ச்சி
இறைவணக்கம், சத்சங்கம்
அத்தனையும் போச்சு; அநியாயம் வந்தாச்சு
சினிமாவுக்குத் தம்பி சீரழிக்க வந்தான்
ஏன் இந்தத் தலைவலி!
இருக்கிற வலிகள் போதாதா?

— இரா. ரேவதி (M.B.B.S.)
மதுரை மருத்துவக் கல்லூரி,
மதுரை.

### இரண்டாம் பரிசுக் கவிதை

சமுதாயம் சந்தையாகும் கண்ணாடியில்
இதயங்களின் இறுக்கத்தில்
உதிரும் உறவுகள்
பத்திரங்களில் பதியும்
கையொப்பங்களாகின்றன!
பொழுதுபோக்கெனில்
கலைமகளை விலைமகளாக்கினால்
அன்னப்பறவையின் கண்கள்
எங்களுக்கில்லையே!

— தியாகு (ஜான் கென்னடி)
சேக்ரெட் ஹார்ட் காலேஜ்,
பூந்தமல்லி, சென்னை — 600 056.

**30.11.86 கல்கி இதழில் வெளியான கட்டுரையின் அடிப்படையில் எழுதப்பட்ட கவிதைகள்:**

# டெலிவிஷனோ டில்லி விஷனோ!



கரண்டு பில்லு
கையைக் கடிக்குது டீ.வி.யாலே!
தம்பி பரீட்சையில்
விட்டான் கோட்டை டீ.வி.யாலே
அம்மா, அப்பா,
கண்ணு போச்சு டீ.வி.யாலே!

— என். சந்திரசேகரன்
பி.எஸ்ஸி கணிதம் மூன்றாம் ஆண்டு,
நேரு மெமோரியல் காலேஜ்,
புத்தனாம்பட்டி,
திருச்சி மாவட்டம்.

எங்கள் டீ.வி.க்கள்
விளம்பர ராஜாக்களுக்கே
'வரவேற்பு விழா'
நடத்துவதால்,
நாங்கள் டீ.வி.க்களுக்கு
'மூடுவிழா' நடத்துவது
அவசியமாக
ஆகிவிடுகிறது!

— ப. அப்துல் ராசிக்
பி.எஸ்ஸி வேதியியல் (இரண்டாமாண்டு)
தெ.தி. இந்துக் கல்லூரி,
நாகர்கோவில் (குமரி மாவட்டம்)

வறுமையாம் நெருப்பு எரியும் பொழுது
திரைப்படப் பிடில் வாசிக்கும்
தொலைக்காட்சி நீரோ மன்னா!
நீ
இளையோர்க்குத் தொலைக் காட்சியா?
வணிக நிலைகூறும்
வண்ண விலைக் காட்சியா?
அறிவுப் பசி அணைக்கும்
கலைக் காட்சியாக மாறுவது
என்று?

— மு. பன்னீர் செல்வம்,
மேனிலை முதலாண்டு
அரசு மேல்நிலைப் பள்ளி
ஆலங்குடி அஞ்சல், புதுக்கோட்டை மாவட்டம்,
622 301.

# அகோரசாமியின்

அகோரசாமி வழக்கம் போல அன்றும் வாக்கிங் போய்விட்டு, தமது வீட்டு வாசலை நெருங்கியவுடன் தரையிலிருந்து எட்டே காலடி உயரத்துக்குத்துள்ளிக் குதித்து, ஆசிய விளையாட்டுப் போட்டிகளின் உயரந் தாண்டு தலில் சாதனையை முறியடித்துவிட்டதை உணராமலே தரை இறங்கினார்.

துள்ளலுக்குக் காரணம்: அவர் கண்ட காட்சி.

அந்தக் காட்சியாவது: அவரது வீட்டு வாசலில் வழியை மறித்தபடி இரண்டு அடுக்குச் செங்கல், ஒரு லாரி 'லோடு' மணல், அரை வண்டிக் கருங்கல் ஜல்லி அத்தனையும் அம்பாரமாகக் குவிக்கப்பட்டிருந்தன.

அகோரசாமி அரை நிமிஷம் போல யோசித்தார்.

'செங்கலைக்கட்டில்கால்களுக்குமுட்டுக் கொடுக்கலாம். ஆனால் அதற்கு ஒன்றிரண்டு கல் போதும்.... மணல்....? ஆளுயரத்துக்குக் காம்பவுண்டில் வளர்ந்திருக்கும் ஒரு ஜோடி தென்னங்கன்றுகளுக்கு வேரில் மணலைக் கொட்டலாம்... அதற்கும் ஒரு 'லோடு' தேவைப்படாது. கருங்கல் ஜல்லி முழுக்க முழுக்க அதிகப்படிதான். இதெல்லாம் மொத்தமாகத் தேவைப்படாது என்பது சர்வ நிச்சயம். இவை நமக்கென்று வந்திருக்க முடியாது. ஒருவேளை பக்கத்து வீட்டுக்காரர் தருவித்திருப்பாரோ? செங்கல் வண்டிக்காரன் முதலில் தவறுதலாகக் கல்லைக் கொண்டு வந்து அடுக்கியிருப்பான். கல்லடிச்சான் காப்பியாக மற்றவர்களும் நம்ம வீட்டு வாசலிலேயே கொட்டிவிட்டுப் போயிருப்பார்கள். எதற்கும் பக்கத்து வீட்டுக்காரரைக் கேட்டால் தெரிந்துவிடும்....'

அகோரசாமி போனபோது அந்தப் பக்கத்து வீட்டுக்காரர் கர்லாக் கட்டைக்குப் பதிலாகக் கிரைண்டர் குழவியை வைத்து விறுவிறுவென்று சுற்றிக் கொண்டிருந்தார். அந்த அநாயாசமான வீச்சையும், அந்த ஆசாமியின் அதீத முண்டாக்களையும் கண்டு அசந்து போய் நின்றார் அகோரசாமி. பிறகு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லலாம்னு..." என மெதுவாக ஆரம்பித்தார்.

"வாய்யா வஸ்தாது! நானே உம்மைக் கூப்பிட்டுப் பேச லாம்னு இருந்தேன். உம்ம வீட்டு மாமரம் இருக்கே, அதை எப்ப வெட்டித் தொலைக்கப் போகிறீர்!"

"வெட்டணுமா? எதுக்காக?"

"மரத்திலிருந்து இலை, பழுப்பு எல்லாம் எங்க வீட்டிலே விழுந்து, எக்கச்சக்கமாக் குப்பை சேருதய்யா... மாசாமாசம் ஆளை வச்சு, பத்து ரூபாய் தண்டம் அழுது, குப்பையை அள்ளிக் கொட்டறேன்..."

"அப்புடியா! எங்க வீட்டுப் புழக்கடையிலே கூடத்தான் உங்க வீட்டு முருங்கை மரம் டன் டன்னாக இலை உதிர்க்கிறது... கம்பளிப் பூச்சித் தொல்லை வேறு. நான் பொறுத்துக் கொண்டில்லையா? வாயைத் திறந்திருக்கேனா?"



# ஒரு காலைப் பொழுது

"அதுதான் அடிக்கடி திருட்டுத்தனமா முருங்கைக் காயைப் பறிச்சு, மணக்க மணக்கச் சாம்பார் வச்சுச் சாப்பிடறீங்களே — அப்புறம் எப்படிய்யா வாயைத் திறப்பீர்?"

"நீங்க மட்டும் ரொம்ப ஒழுங்கோ? மாவடு, மாங்காய், மாம்பழம் எல்லாம் என் வீட்டு மரத்திலே பறிச்சுக்கிறீரே, பாவி மனுஷா!" என்று பதிலுக்குக் கேட்டிருப்பார் அகோரசாமி. ஆனால் கிரைண்டர் குழவி தம் முகத்தைக் குறிபார்த்து வீசப்பட்டால் என்ன செய்வது என்ற பயத்தின் காரணமாக, சட்டென்று சுருதியை மாற்றினார்.

"அதெல்லாம் கிடக்கட்டும் சார்.... என் வீட்டு வாசல்லே நெறைய மணல், ஜல்லி, செங்கல் எல்லாம் குவிந்திருக்கே, பார்த்தீங்களா?"

"அது உம்ம தலையெழுத்து! பொறுத்துக்கிட்டுப் போம்!"

"என்னது! தலையெழுத்தா! செய்யறதையும் செய்துட்டு, அநியாயமாப் பேசறீங்களே!"

"நான் அநியாயமாப் பேசறேனா? காலங்காலையிலே வந்து வம்புக்கு இழுக்கிறது நீரா நானா?"

"நிச்சயமா நீங்கதான்... 'வாக்' போயிட்டு வர்றதுக்குள்ளே வழியை மறிச்சு மண்ணைக் கொட்டி வச்சிருக்கீரே... உருப்பிடுவீங்களா?"

"இதோ பாரும்... இந்த ராங்கெல்லாம் நம்மகிட்டே வச்சுக்காதீர்.... உமக்குச் சரியா ரெண்டு நிமிஷம் டயம் தரேன். அதுக்குள்ளே இடத்தைக் காலி பண்ணிடும். இல்லாட்டி, புத்தூருக்கு அடுத்த பஸ்ஸைப் பிடிக்கும்படியான நிலைமையிலே வீடு போய்ச் சேருவீர்!"

சொல்லியபடியே அந்த ஆசாமி கிரைண்டர் குழவியைக் கீழே வைக்கவும், அடுத்த நிமிடம் தன் மீது தான் பாயப் போகிறார் என்று எப்போதும் போலத் தப்புக் கணக்குப் போட்ட அகோரசாமி, உடனடியாக வாபஸ் வாங்கினார். போகிறபோக்கில் அந்த வீட்டு வாசலில் இருந்த பவழமல்லி மரத்தை ஆத்திரம் தீர ஓர் உலுக்கு உலுக்க மட்டும் தவறவில்லை...

பதினேழாம் நம்பர் வீட்டுக்காரன் மிரட்டுகிறான். 15ம் நம்பர்காரரைக் கேட்டுப் பார்ப்போமா? ஒருவேளை இந்தச் செங்கல் சமாசாரமெல்லாம் அவர் வீட்டுக்கு வந்ததாக இருக்குமோ?

இந்த யோசனையுடன் இன்னொரு பக்கத்து வீட்டுக்கு அகோரசாமி சென்றபோது, முன் கதவு சாத்தியிருந்தது. வெளியிலிருந்த அழைப்பு மணியின் குமிழை அழுத்தினார்.



முகுந்தன்

வீட்டினுள்ளே மணி ஒலிப்பதும், யாரோ நடந்து வரும் ஓசையும் கேட்டன.

கதவு ஐந்து சென்டி மீட்டர் அகலத்துக்குத் திறக்கப்பட்டது.

காம்பஸ் வைத்து வரைந்தது போன்ற வட்ட முகம்; சுருள் சுருளாகக் கூந்தல்; கொழுத்துச் சிவந்த கன்னங்களில் கொத்துக் கொத்தாக முகப் பரு, உதடுகளில் ரத்தச் சிவப்பில் சாயம் — இந்தக் கோலத்தில் டீன் ஏஜ் பெண் ஒருத்தி எட்டிப் பார்த்து, ''என்ன?'' என்று அதட்டினாள்.

''வந்து.... எங்க வீட்டிலே செங்கல், மணல், ஜல்லி, எல்லாம் ஏகத்துக்குக் கிடக்கு....

''எங்களுக்குத் தேவைப்படாது சார்!'' என்று மூன்றே வார்த்தைகளைத் துப்பி விட்டு, படாரென்று கதவை அறைந்து சாத்தியது அந்தப் பெண்.

'விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்குள் என்ன அவசரம்? இந்தக் காலத்து டீன் ஏஜ் வர்க்கமே இப்படித்தான்' என்று முணு முணுத்தபடியே மறுபடியும் மணிக் குமிழில் கைவைத்து அழுத்தினார்.

மணி அடித்ததே தவிர, கதவு திறக்கப்பட வில்லை. 'ஒருவேளை அந்தப் பெண் மாடிக்குப் போயிருக்கக் கூடும்' என்ற முடிவுடன், கதவின் வெளிப்புறத்திலிருந்த தாழ்ப்பாளைப் பலமாகச் சத்தப்படுத்தினார். மணிக் குமிழை விட்டு விரலையும் எடுக்கவில்லை.

கதவு திறந்ததும் தன் வீட்டு நம்பரைச் சொல்லி, 'நான் அந்த வீட்டுக்காரன்' என்கிற அறிமுகத்துடன்தான் பேச ஆரம்பிக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டார்.

'படார்!' என்று கதவு ஆத்திரத்துடன் திறக்கப்பட்டது. இம்முறை இடைவெளி எட்டு செ.மீ.க்கு அதிகரித்திருந்தது. ஆனால் எட்டிப் பார்த்ததோ ஓர் அறுபது சதவிகித வழுக்கைத் தலையர்.

''வணக்கம் சார்! 16ம் நம்பர்லே....''

''16ம் நம்பரா? பக்கத்து வீடுய்யா!''

கதவை அறைந்து மூடினார் வழு. தலை.

பொறுமையில்லாத இந்த மனிதர் இந்தப் பெண்ணின் அப்பனாகத்தான் இருக்க வேண்டும் என்று உறுதிப்பட்டது அகோரசாமிக்கு.

எடுத்த விஷயத்தை எளிதில் கைகழுவ விரும்பாத ரகம் அவர். எனவே, கதவை ஓங்கி ஓங்கித் தட்டினார். மணியையும் தொடர்ந்து அழுத்தி வீறிடச் செய்தார்.

மூன்றும் முறையாகக் கதவு திறந்தது. இடைவெளி வழியாக, குத்துச் சண்டைக் கையுறை அணிந்த ஒரு கரமும் அதைத் தொடர்ந்து வழுக்கைத் தலையும் வெளிப் பட்டன.

''யோவ்! இந்த ராங்கெல்லாம் நம்ம கிட்டே வச்சுக்காதீர்! நான் ஒன், டூ, த்ரீன்னு சொல்றதுக்குள்ளே நீர் ஓடிப் போயிடணும்.... இல்லாட்டி....'' என்றபடியே நீண்ட அந்தக் கரம் அகோரசாமியின் முகத்தில் பிள்ளையார் சுழி போடுவது போலச் செல்லமாக ஒருமுறை இடமிருந்து வலம் வந்து, மூக்கைக் குறி பார்த்து நிற்கவும், சில்லு மூக்குப் பெயர்ந்து விடுமோ என்ற பயத்தில் உளறியடித்துக் கொண்டு, காம்பவுண்டை விட்டு வேகமாக வெளியேறினார் அகோர சாமி.

இப்போது அவரது வீட்டு வாசலில் வெட்டுக் கிளி போல மொபெட் ஒன்று நிற்க, காக்கி பேண்ட்ஸும் வெள்ளைச் சட்டையும் அணிந்த கட்டை குட்டையான ஓர் ஆசாமி, மினி நோட்டுப் புத்தகம் ஒன்றைத் திறந்து வைத்து, மேலும் கீழுமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அகோரசாமியைக் கண்டதும் அந்த நபரின் முகம் மேலும் கடுகடுப்பாகியது.

''நீங்கதான் இந்த வீட்டுச் சொந்தக் காரரா?''

''ஆமாம் என்ன விஷயம்?''

''சாங்ஷன் லெட்டரை எடுங்க!''

''சாங்ஷனா? எதுக்கு?''

''அப்பமன்னா நீங்க சாங்ஷன் வாங்கல்லியா?''

''எனக்கு எதுக்கு சார் அதெல்லாம்?''

குட்டை ஆசாமியிடம் திமர் மரியாதை தலைகாட்டியது. ''அப்ப நீங்க வட்டச் செயலாளர் அல்லது மன்றத் தலைவருக்கு ஏதாச்சும் சொந்தக்காரருங்களா?''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்லையே!''

''இல்லாட்டி.... உங்க வீட்டிலே சில பகுதிகளை இடிச்சுக் கட்டறதுக்கு நகர வளர்ச்சிக் குழுவிலேருந்து அனுமதி வாங்கியிருக்கணுமே?''

''நான் வீட்டை இடிச்சுக் கட்டறதாக யார் உங்களுக்குச் சொன்னாங்க!''

''பின்னே எதுக்கு இதெல்லாம் வாங்கி, ரோட்லே போக்குவரத்துக்கு இடைஞ்சலா குவிச்சு வச்சிருக்கீங்க?''

''நானா குவிச்சிருக்கேன்?''

''இல்லே, நானா?''

''எனக்கு என்னாங்க தெரியும்?''

''உங்க வீட்டு வாசல்லேதானே இருக்கு? உங்க பொருளாகத்தானே இருந்தாகணும்?''

''அப்படிப் பார்த்தால், உங்க மொபெட் கூடத்தான் என் வீட்டு வாசல்லே நிக்குது. அது என்னுதுன்னு சொன்னால் சும்மா விடுவீங்களா?''

''விதண்டாவாதமா பேசாதீங்க!''

''விதண்டாவாதம் செய்யறது நீங்களா நானா?''

''மிஸ்டர்! இந்த ராங்கெல்லாம் நம்ம கையிலே வச்சுக்காதீங்க!''

அந்த மிரட்டலை அன்று மூன்றுவது முறையாகக் கேட்டதும் அகோரசாமியின் மூளைக்குள் அதுவரை இருந்து வந்த நிதான புத்தி, அளவுக்கு மீறி இழுக்கப்பட்ட 'ரப்பர்—பேண்ட்' போலப் படக்கென்று அறுந்தது. என்ன செய்கிறோம், இதன் விளைவுகள் எப்படியெல்லாம் விபரீத உருவெடுக்கும் என்றெல்லாம் யோசிக்காமல் அந்தக் கட்டை மனிதரின் கன்னத்தில் 'பளார்!' என்று ஓர் அறைவிட்டார்.

ஏகநாதரின் போதனைகளில் அந்தக் கட்டை மனிதருக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது போலும். எனவே, மறு

கன்னத்தைக் காட்டாமல் அகோரசாமியின் பனியனைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி, அ.சாமியின் ஜாதிப் பெயரை முன் மொழிந்து, ''..... பயலே! உன்னை எப்படிக் கவனிச்சுக்கணுமோ அப்படிக் கவனிச்சுக் கிடறேன்!'' என்று வாலைச் சுழட்டாமல் சூளுரைத்து, சடாரென்று மொபெட்டில் தாவியேறினார்.

அகோரசாமி மணல்—ஜல்லிக் குவியல் மீது ஜாக்கிரதையாகக் கால் வைத்து,குழப் பத்தில் தள்ளாடியபடியே வீட்டினுள் சென்றார்.



''உங்க பிள்ளைக்கு நல்ல புத்தி வர துக்கு மகாபாரதம் கதை சொல்லிக் கொடுத்தீங்களே, இப்ப எப்படி இருக் கான்?''

''சகுனியைக் குருவா நெனைச்சுண்டு 'ரம்மி'யில் பெரிய ஆளாயிட்டான்!''

— என். வி. ரமணி

**அ**டுத்த பதினைந்தாவது நிமிடம் ஒரு மிடுக்கான சப்—இன்ஸ்பெக்டர் இரண்டு போலீஸ்காரர்கள் சகிதம் வீட்டு வாசலில் வந்து நின்று, ''சார் இப்படிக் கொஞ்சம் வர்றீங்களா?'' என்று தோரணையுடன் அழைத்தார்.

மறைந்த நடிகையின் ஆவி, ஆட்டோவில் ஏறி ஊர்வலம் வந்த செய்தியைப் படித்துக் கொண்டிருந்த அகோரசாமி, பேப்பரைத் தூக்கியெறிந்துவிட்டு வாசலுக்கு விரைந் தார்.

''அரசாங்க ஊழியர் தன் கடமையைச் செய்யும்போது குறுக்கிட்டு அவரை அடித்த தாக உங்க பேர்லே ஒரு புகார் வந்திருக்கு. கொஞ்சம் ஸ்டேஷன் வரைக்கும் வந்துட்டுப் போங்க!'' என்றார் இன்ஸ்பெக்டர் கரகரத்த குரலில்.

''நான் கட்டாயம் வந்துதான் ஆகணுமா?''

''நீங்களா வராட்டி, பாதுகாப்போட அழைச்சுக்கிட்டுப் போறதுக்குத்தான் கான்ஸ்டபிள்களோடு வந்திருக்கேன்....''

''நான் சொல்றதைக் கேளுங்க இன்ஸ் பெக்டர். அந்த ஆசாமியை நான் அடிச்சது வாஸ்தவம்தான்.... ஆனால் அதுக்குப் பின்னணியிலே ஒரு தனிக் கதை இருக்கு. நான் எந்த வம்புதும்புக்கும் போகாத, அடக்க மான ஆசாமி சார்....''

''அ(த்)தை மட்டும் சொல்லாதீங்க...! அரை மணி நேரத்துக்குள்ளே உங்க மேலே மூணு கம்ப்ளெயிண்ட் வந்திருக்கு. இதுக்குப் பேர்தான் அடக்கமா?''

''மூணு புகாரா? யார் கொடுத்திருக் காங்க?''

''உங்க பக்கத்து வீட்டுக்காரங்கதான்.... ஒருத்தர் வீட்டிலே போய் மிரட்டிப் பேசி, அவங்க வீட்டு மரக்கிளையை ஒடிச்சு, கலாட்டா பண்ணியிருக்கீங்க.... இன் னொருத்தர் வீட்டிலே வயசுப் பொண்ணு கிட்டே வம்பு வளர்த்திருக்கீங்க. இதுக்கும் அப்பாலே, கவர்ன்மென்ட் சர்வன்ட்டைக் கன்னத்திலே அறைஞ்சிருக்கீங்க. ஒரு பெரிய மனுஷன் செய்யற காரியமா இதெல்லாம்?''

நீங்களே பாருங்க இன்ஸ்பெக்டர், எங்க வீட்டு வாசல்லே எத்தனை செங்கல், மணல் எல்லாம் கொட்டிக் கிடக்கு....''

''ரோட்டிலே போக்குவரத்துக்கு இடைஞ் சல் பண்ணதுக்காக, கார்ப்பரேஷனும், வீட்டை இடிச்சுக் கட்டறதுக்கு அனுமதி வாங்காததுக்காக நகர வளர்ச்சிக் குழுவும் தனித்தனியே உங்களுக்கு நோட்டீஸ் விடு வாங்க. தயாரா இருங்க!''

''ஐயோ! அது வேறே தலைவேதனை இருக்கா?''

''இப்ப நீங்க என்கிட்டேயும் தகராறு வச்சுக்கிட்டால், மொத்தம் அரை டஜன் கேஸ் ஆகிப் போயிடும்! அதனாலேதான் சொல்றேன். மரியாதையா ஸ்டேஷனுக்கு வாங்க!''

இன்ஸ்பெக்டருடன் போலீஸ் ஸ்டேஷ னுக்குச் சென்று, ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுத்து, தாம் அடித்த காக்கிச் சட்டையின் இருக்கரத்தால் பதிலுக்கு ஓர் அறை வாங்கிக் கணக்குத் தீர்த்துக் கொண்டு, இனி நல்ல பிள்ளையாக நடப்பதாக உறுதிமொழி அளித்து, இளித்த கான்ஸ்டபிள்களுக்கு இரண்டிரண்டு ரூபாய் 'அன்பளிப்பு' அழுது, தம்மை இப்படியெல்லாம் ஆட்டிப் படைக் கும் விதியை நொந்து கொண்டே அகோர சாமி வீடு திரும்பினாரோ இல்லையோ, முன்பு போலவே அதிர்ச்சியால் துள்ளிக் குதித்தார்.

அவரது வீட்டு வாசலில் கிடந்த செங்கல் இத்தியாதிகள் இருந்த சுவடு தெரியாமல் மறைந்து போயிருந்தன!

வாசலில் நின்றபடியே கூப்பாடு போட்டு மனைவியை அழைத்தார். ''ஆமாம், இங்கே இருந்ததெல்லாம் எங்கே போச்சு?'' என்றார்.

பக்கத்துத் தெருவிலே 16—ம் நம்பர் வீட்டை இடிச்சுக் கட்டறாங்களாம். அவங்க தான் இதையெல்லாம் தருவிச்சிருந்தாங் களாம். நீங்க ஸ்டேஷனுக்குப் போயிருந்த போது, லாரியைக் கொண்டு வந்து அத்தனை யையும் அள்ளிக் கொண்டு போயிட் டாங்க....''

மனைவி சொல்லச் சொல்ல, அடுத்த தெரு 16—ம் எண் வீட்டுக்குப் போய் அந்த ஆசாமி யை ஓர் உலுக்கு உலுக்கலாமா என்ற வெறி வந்தது அகோரசாமிக்கு.

ஒரே நாளில் ஏழு பேரை வம்புக்கிழுத்த வர் என்ற சிறப்புடன் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற விருப்பமில்லாததால் கால் செருப்பை உதறும்போது அந்த எண்ணத்தை யும் சேர்த்து உதறிவிட்டு, வீட்டுக்குள் போனார்!

# 12 சின்னச் சின்ன

அப்படியே, காற்றில் கரைந்து போய் விடமாட்டோமா என்று இந்திரா நினைத்தாள். பாண்டியனுக்கெதிரில் போலீஸிடம் அவமானப்பட வெட்கமாய் இருந்தது. "நான் தான் இந்திரா" என்று சொல்வதற்குள் மூச்சிரைத்தது. விலங்கிருக்குமோ என்று பயந்து கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டாள்.

"நீங்கதானும்மா?"

போலீஸ்காரர் சற்றுத்தளர்ந்தார். "கலெக்டர் அனுப்பினாரும்மா. உங்ககிட்டே இந்தப் பார்சலைக் குடுத்துட்டு வரச் சொன்னாரும்மா!" அறை வாசலில் வைத்திருந்த ஒரு பிரவுன் கலர் பார்சலை நீட்டினார்.

இந்திரா நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள்.

"என்னம்மா அது?" என்றான் நந்தகுமார் ஆர்வத்துடன்.

பார்சலில் நந்தகுமார் மேடையில் வாங்கியிருக்க வேண்டிய சிறு வெள்ளிக் கோப்பை இருந்தது. மூன்று புத்தகங்கள் புது வாசனையுடன் குறுக்கில் பட்டு ரிப்பன் கட்டப்பட்டிருந்தன. சரிகைப் பேப்பரில் சுற்றப்பட்ட ஒரு நீள் செவ்வகப் பெட்டி இருந்தது. திறந்தாள். இரண்டு பேனாக்கள். பளபளப்பான தங்க முலாம். 'நந்தகுமாருக்கு, மாறா அன்புடன் ஆட்சியாளரின் அன்புப் பரிசு' என்ற வாக்கியம் சதுர அட்டையில் இருந்தது.

அப்புறம் ஒரே ஒரு கலர் போட்டோ.



# கனவுகள்

நந்தகுமாரின் கண்கள் அம்மாவைத் தேடிக் கொண்டே கலெக்டரிடம் கையை நீட்ட, கலெக்டர் சிரித்துக் கொண்டே அவனிடம் பரிசுக் கோப்பையை வழங்கும் காட்சி அதில் உன்னதமாகச் சிறைப்பட்டிருந்தது.

''அட கலெக்டர் அய்யாவுக்குப் போலீஸ் மரியாதையெல்லாம் நடக்குது போல இருக்கே'' என்று சொல்லிக் கொண்டே தங்கராஜ் பிஸ்கெட் பொட்டலத்துடன் நுழைந்தான்.

நந்தகுமார் சற்றே நாணிக் கொள்ள, போலீஸ்காரர் ஒரு சல்யூட்டுடன் விலகிக் கொண்டார்.

''ஏற்கெனவே பரிமளாவைப் பாக்க நீங்க வரதில்லேன்னு சொல்லிட்டிருக்கா, இப்ப புள்ளே வேறே பெரிய ஆளாயிட்டாரு...'' என்று தங்கராஜ் இழுத்தான்.

''நாளைக்கே நான் பரிமளாவைப் பார்க்கப் போறேன். அவகிட்ட கொஞ்சம் பேச வேண்டியிருக்கு'' என்றாள் இந்திரா. பாண்டியனை அடிக்கண்ணால் பார்த்துக் கொண்டு.

இந்தமுறை இந்திரா வந்தபோது, பரிமளாவீட்டுத்திண்ணையில்சின்னப்பெண்களின் அம்மானை இல்லை. உள்ளே மூச்சிரைப்புடன் விட்டுவிட்டு, 'பன்னெண்டு', 'பதிமூணு' என்ற எண்ணிக்கைத் தொடர் கேட்டது. இந்திரா எந்தவித முன்னறிவிப்பும் இல்லாமல் தடாலென்று நுழைந்தாள். அன்றைக்குப் போல இன்றைக்கு ஏதாவது ருசியான காட்சி கிடைக்காதா என்று.

பரிமளா தண்ணீர் இறைக்கும் கயிற்றை வைத்துக் கொண்டு, 'பதினாலு' என்று குதியாட்டத்தைத் தொடர்ந்தவள், இந்திராவைப் பார்த்ததும் கயிற்றை அந்தரத்திலேயே விட்டாள். கயிற்றை எறிந்துவிட்டு, ஜல் ஜல் என்று ஓடி வந்து அப்படியே கட்டிக் கொண்டாள்.

''வாக்கா... வாக்கா... நந்துவுக்கு இப்ப எப்படி இருக்கு?''

''நேத்திக்கே தையல் பிரிச்சிட்டாங்க. இன்னிக்குப் பள்ளிக்கூடம் போறான். நீ வேலைக்குக் கிளம்பறதுக்குள்ள புடிக்கணும்னு ஓடி வந்தேன். எம்மேலே கோவமாயிருக்கியாமே?''

''பின்னே என்னக்கா அடிக்கடி வந்து பாக்கறேன்னு சொன்னே. வேலையை விட்டப்புறம் இந்தப் பக்கம் தலைவச்சிக் கூடப் படுக்க மாட்டேங்கறியே...''

''அட, பரிமளாவுக்கா இவ்வளவு கோபம் வருது?''

''பர்ர்ரிமளாவுக்குத்தான் கோவம் வருது...'' கால் மாற்றி நின்றபோது அந்த ஜல்ஜல் சப்தம் மறுபடியும் கேட்டது.

''அது என்னது, புதுசா ஏதோ சவுண்டு கேக்குது?''

பரிமளா சட்டென்று பம்மிக் கொண்டாள். ''ஒண்ணுமில்லேக்கா.''

''ஏய் போக்கிரி, காலைக் காட்டு பாப்போம்.''

''போக்கா...'' என்று சிணுங்கிக் கொண்டே புடைவையைச் சற்று உயர்த்திக் காட்டினாள்.

''அட, இந்தக் கொலுசு எப்ப வாங்கினே?''

''நான் எங்கே வாங்கினேன். அவரு வாங்கித் தந்தாரு.''

''எவரு?''

''போக்கா. ஒண்ணும் தெரியாதவ மாதிரி...'' முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டாள்.

''ஆயா எங்கே பரிமளா?''

''அடுப்புப் பொகையோட அல்லாடிட்டிருக்குதுக்கா.''

''பரிமளா...'' இந்திரா வெகு தயங்கி இழுத்தாள்.

''என்னக்கா, இத்தனை யோசிக்கறே. என்ன சொல்லு...''

''நந்துவைப் பெரிய படிப்பு படிக்க வைக்கணும் பரிமளா...''

''சரிக்கா.''

''எனக்கு எங்க அண்ணன் வீட்டிலேயும் ஆதரவு இல்லே.''

''ஆமாங்க்கா...''

''எனக்கும் நந்துவுக்கும் ஒரு ஆதாரமே இல்லே பரிமளா வாழ்க்கையில்....

''எனக்குப் புரியலேக்கா, நீ என்ன சொல்றேன்னு...''

''உங்கண்ணன் எப்படிப்பட்டவருடி?''

''யாருக்கா?''

''அதான்டி, அந்தப் பரட்டைத் தலைக்காரரு. அவரைத்தானே அண்ணன் அண்ணன்னு கொண்டாடுவே?''

''பாண்டி அண்ணனா... தங்கமானவரு, ஏங்க்கா கேக்கறே?''

''அந்தத் தங்கம் நாலு நாளைக்கு முன்னாலே ஒரு கேள்வி கேட்டுது பரிமளா...''

''என்னக்கா அது.... எக்குத்தப்பா ஏதாவது சொல்லிட்டாரா அண்ணன்?''

''ம்.''

''என்னான்னு?''

இந்திரா கொஞ்சம் இடைவெளி விட்டுச் சொன்னாள். ''எல்லாத்தையும் இழந்தவ, என் கழுத்தில் மறு தாலி கட்டறேன்னு... பாத்தியா உங்கண்ணன் போக்கை...''

பரிமளா திடீரென்று காட்டுப் பூனை போல் சீறினாள்.

''எங்கண்ணன் போக்குக்கு என்னக்கா? சரியாத்தான் சொல்லியிருக்காரு...'' இந்திராவை நெருங்கி முகவாயைப் பிடித்துத் தூக்கினாள். ''இப்ப சொன்னியே நந்துவுக்குப் படிப்பு, படிப்புன்னு... அண்ணன் வீட்ல எச்சப் பாத்திரத்தைப் பாக்கறா மாதிரி பாக்கறாங்கன்னு... இதுக்கெல்லாம் ஒரு வழி பொறக்க வேணாமா? எங்கண்ணன் பெரிய மனசோட ஒரு வழி காட்டியிருக்குதுக்கா. நீ என்னக்கா சொன்னே?''

''புடி கொடுக்கலே பரிமளா...''

''புடி கொடுத்துடுக்கா. புடி கொடுத்துடு.. வேணும்னு சொல்லிடாதக்கா.... என் கண்ணு இல்லே... என் செல்லம் இல்லே...''

''விடு பரிமளா...'' இந்திரா தலையைக் குனிந்து கொண்டாள். பரிமளா அவள் தலையைத் திருப்பிக் கன்னத்தில் 'ப்ச்' என்று உதடு ஈரம் பட முத்தமிட்டாள்.

''என்ன சொல்லப் போறேக்கா? நல்ல முடிவுதானே?''

''உன் ரெண்டாவது புருஷன்கிட்டே எப்படிச் சொல்றதுன்னு தெரியலே பரிமளா...''

''யாருகிட்ட, நந்துகிட்டயா?''

''ம்.''

''சாயந்தரம் நான் வந்து உடைச்சிட றேன். நீ போக்கா தைரியமா...'' என்று இந்திராவின் நெற்றியின் இருபுறமும் விரல்களை நெட்டி முறித்தாள் பரிமளா.

நந்தகுமார் ஸ்கூலுக்குப் போவதற்கு முன்பே தீர்மானித்துவிட்டான். பள்ளிக் கூட மைதானத்தில் நுழைந்ததும், முதல் வேலையாக அந்தச் சத்துணவு ஆயாவைத் தேடிப் பிடித்தான்.

''ஆயா எனக்கு வேலை வாங்கித்தரேன்னு சொன்னியே, ஞாபகமிருக்கா?''

''ஆமாண்டா ராசா. உடம்பு சொகமா யிடுச்சா உனக்கு?''

''என்னை இன்னிக்கே வேலைல சேர்த்து வுட்றியா ஆயா?''

''நெஜமாவா சொல்றே?'' சுருக்குப் பையிலிருந்து காய்ந்த வெற்றிலையை எடுத்து வாயில் அரக்கிக் கொண்டு ஆயா இடுப்பில் சேலையைச் செருகிக் கொண்டாள். ''அதான் இன்னிக்கு நீ பொஸ்தகப் பை கொண்டார லையா? படிப்புதான் முக்கியம்னு அன்னிக்கு சொன்னே?'' ஆயா எழுந்து அவனை அழைத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.

''ஆமா ஆயா... ஆனா அம்மாவுக்கு உடம்பு சரியில்லேன்னு வேலையை விட்டு நின்னுட்டாங்க. நான் எங்கம்மாவுக்குச் சம் பாதிச்சுப் போடணும்.''

''உங்கம்மா எங்கே வேலை செய்ஞ்சுது?''

''தீப்பெட்டி ஃபாக்டரில...''

நடந்து கொண்டிருந்த ஆயா சட்டென்று நின்றுவிட்டாள்.

''அப்பா நந்தகொமாரு. உன்னையும் அங்க தான் வேலைக்குச் சேர்க்கப் போறேன். உங்கம்மா அங்க வேலை செய்ஞ்சிதுன்னு யார்கிட்டேயும் சொல்லாதே.''

''ஏன் ஆயா?''

''அம்மாவைப் போல் பிள்ளையும் பாதில வேலையைவிட்டு நின்னுடும்னு வேலை தர மாட்டாங்க.''

''சரி ஆயா...''

நந்தகுமார் கையிலாடும் தூக்கோடு திரும் பிப் பார்த்தான். பள்ளிக்கூடமும், அங்கே மணியடிக்காத தைரியத்தில் சுதந்திரமாய் விளையாடும் சிறுவர்களும் மெல்ல மெல்ல அவன் பார்வையிலிருந்து விலக, அவன் கண்களில் கொஞ்சமும் ஏக்கமில்லை.

தீப்பெட்டித் தொழிற்சாலை இன்னும் ஆயிரம் பேர் வந்தாலும் வேலைக்கு எடுத்துக் கொள்ளத் தயாராயிருந்தது. நந்தகுமார் சுலபமான கேள்விகளுக்குப் பின், சில அடிப்படை எச்சரிக்கை அறிவுரைகளுக்குப் பின் நம்பர் கொடுக்கப்பட்டான். பாக்கிங் செக்ஷனில், லேபிள் குவியல் அருகே உட் கார வைக்கப்பட்டான். பாண்டியன், தங்க ராஜ் யாராவது தென்படுகிறார்களா என்று பார்த்தான்.

''தம்பி வேடிக்கை பார்க்காதே... வேடிக்கை பார்த்தே காசு கெடைக்காது. இங்க பாரு பசை இருக்குது. லேபிள்ல இப்படி சர்ர்னு தடவி காக்கிப் பார்சல்ல நடுவில ஒட்டு. மொத நாளு இதைச் செய் போறும்...''

அந்த ஆசாமி கம்ப்யூட்டர் வேகத்துடன் ஆறு பார்சல்களை ஒட்டிக் காண்பிக்க நந்த குமார் பிரமித்தான். கண்களை மூடி, மானசீக மாக அம்மாவை வணங்கிவிட்டு ஆரம்பித் தான்.

சூரியன் இறங்கும் நேரம் நந்தகுமா ருக்கு வேலை முடிந்தது.

''கூலியை இப்பவே வாங்கிக்கறயா? இல்ல வாரக் கூலியா வாங்கிக்கறியா?''

நந்தகுமார் சற்று யோசித்துவிட்டு, ''இன்னிக் கூலியை மட்டும் இப்பவே கொடுங்க. மத்ததைப் பத்தி அப்புறம் பேசிக்க லாம்'' என்றான்.

''வெவரமான ஆளுடா நீ...''

ஃபாக்டரியிலிருந்து வெளிப்பட்டபோது, முதுகு லேசாக வலித்தது. விரல்களை எவ் வளவு தேய்த்துக் கழுவியும் பசையின் சொர சொரப்பு இருந்தது. மனசு நிறைய சாதனை யின் சந்தோஷம் இருந்தது.

பெட்டிக்கடையில், ஃபாக்டரி ஆசாமிகள் டீ குடித்து, சிகரெட் புகைத்து, வேலை முடிந்து திரும்பும் சேலைகளை, 'அட பாருப்பா... அம்பிகாவும் ராதாவும் ஒண் ணாவே வராங்க' என்று அடையாளம் பிரித் துச் சிரித்துக் கொண்டிருக்க, நந்தகுமார் அந்தக் கடையில் நின்று, எல்லா பாட்டில் களையும் பார்த்தான். இரண்டு சாக்லேட் களை வாங்கிக் கொண்டான். முதல் சம்பளத் தில் அம்மாவுக்கு முதல் இனிப்பு.

நடந்தான். சைக்கிள்கள் விரைந்தன. கோழிகள் பதறி ஓடின. பன்றிகள், வால் களை விசிறிக் கொண்டே காதலுடன் ஒன்றை ஒன்று துரத்தின. சொந்தக்காரர் யாருமில்லை என்று நிச்சயித்துப் புளியங்காய்க்கு ஒரு பையன் குறி வைத்துக் கொண்டிருந்தான்.

கலர் கலரான குதிரையும், அகன்ற கண் ஐயனாரும், பெரிய மீசை வைத்த சிப்பாய் களுமாய்க் கோயில் கண்ணில் பட்டது. முதன் முதலில் சம்பாதித்திருக்கிறான். சாமி யிடம் ஆசீர்வாதம் வாங்க வேண்டும். தயங்கித் தயங்கி நுழைந்தான்.

ஐயனாரின் மீது ட்யூப் லைட் வெளிச்சக் கண்ணைச் சிமிட்ட ஆரம்பித்திருந்தது. அவருக்கு முன்பு இருந்த மண்வட்டத்தில் செருகப்பட்டிருந்த வேல்களில், மணிகள் காற்றை ஒலிப்படுத்தின. கற்கோயிலில் அகல் வெளிச்சத்தில் இரண்டு கல்யாண மாகாத பெண்கள் உத்தம புருஷனை வரம் கேட்டு, சன்னிதானத்தைச் சுற்றி வந்தார்கள்.

நந்தகுமார் கண்களை மூடிப் பிரார்த்தனை செய்து, கண்களைத் திறந்தபோது, எதிரே பூசாரி நின்றிருந்தார். கையில் இரண்டு ரோஜாப் பூக்களை வைத்திருந்தார்.

''எங்கே அம்மா?'' என்றார் அவனிடம் ரோஜாவை நீட்டிக் கொண்டே.

''வீட்ல இருக்காங்க...'' என்றான் நந்தகுமார் புரியாமல், பூவை வாங்கிக் கொண்டான்.

''அப்ப, நீ அர்ச்சனைக்குக் கொடுத்தாங்களே, அவுங்க பையன் இல்லையா? பிராகாரம் சுத்தப் போய்ட்டாங்களா என்ன?''

''சாமி, பூ...'' என்று தயங்கினான் நந்தகுமார்.

''வீட்லே அம்மாவுக்குக் கொண்டு கொடு. எங்காத்தா எல்லாம் நல்லபடியாத்தான் நடத்தி வைப்பா. வாங்கம்மா, அர்ச்சனைக் கூடையை மறந்திட்டீங்களே'' என்று பிராகாரத்தைச் சுற்றி வந்த பெண்ணிடம் திரும்பினார்.

நந்தகுமார் கோயிலை விட்டு வெளியே வந்தான். அம்மாவிடம் பூவைக் கொடுக்கலாமா, கூடாதா? சாமி பூதானே, கொடுத்தால் தப்பில்லை. சாக்லேட்டோடு போட்டுக் கொண்டான்.

இருள் வேகமாய்ப் பரவ ஆரம்பிக்க, வீட்டை நோக்கி ஓடினான்.

**வீ**ட்டில் நுழையும்போதே, ''வாங்க தொரை!'' என்றாள் சுகந்தி, நெற்றியில் வைத்துக் கொண்டிருந்த பொட்டை நடு விரலால் திருத்திக் கொண்டே. ''என்னு இவ்வளவு லேட்டு?'' பதிலுக்குக் காத்திருக்காமல் செருப்புகளை மாட்டிக் கொண்டாள். ''உங்கம்மா யாரோ ஃப்பிரெண்டு வந்திட்டான்னு தோட்டத்தில உக்காந்திருக்கா. நீயாவது சசிக்குத் தொணையா இங்கே இருந்துக்க..'' சரேலென்று வெளியே கிளம்பிவிட்டாள். மாமா கடையிலிருந்து இன்னும் வரவில்லை போலும்.

சசிகலா கணக்கு நோட்டுடன் போராடிக் கொண்டிருக்க, கிணற்றடிக்கு ஓடினான்.

முற்றம் நிறையப் பாத்திரங்களைப் போட்டுத் தேய்த்துக் கொண்டு இந்திரா உட்கார்ந்திருக்க, பக்கத்தில் அந்தப் பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்த பெண்ணை இதற்கு முன் நந்தகுமார் பார்த்ததில்லை. ஓட்டம் தயக்கமான நடையாகக் குறைந்து போக, நெருங்கினான்.

''அம்மா...''

தூக்கைத் திறந்து துழாவி உள்ளேயிருந்து



''ஏதாவது அசம்பாவிதம் நடந்ததுக்கப்புறம், போலீஸார் 'மாமூல் வாழ்க்கை திரும்பிட்டது'ன்னு சொல்றாங்களே, அதுக்கு என்ன அர்த்தம்?''

''அவங்களுக்கு வழக்கம்போல் மாமூல் வர ஆரம்பிச்சுட்டதுன்னு அர்த்தம்.''

— கீழை அ. கதிர்வேல்

சாக்லேட்டையும், பூவையும் எடுக்க, பூ மட்டும் கையோடு வந்தது. அம்மாவிடம் நீட்டினான்.

இந்திரா பாத்திரம் தேய்ப்பதை நிறுத்திவிட்டு அவனை வியப்போடு பார்த்தாள்.

''அட என்ன மாதிரி சகுனம் பாருக்கா...'' என்றாள் பரிமளா, சந்தோஷம் பொங்க. நந்தகுமாரின் தலையை வாஞ்சையுடன் பிடித்துக் கோதிவிட்டாள்.

''யாரும்மா இது?'' பூவை அம்மாவின் கையில் திணித்தான்.

''நான்தான் பரிமளா...''

''தங்கராஜ் அண்ணன் கட்டிக்கப் போற பரிமளாவா?''

''என்னக்கா, இவன் கிட்டே கூடச் சொல்லியாச்சா...?''

''அம்மா, நான் உங்கிட்டே ஒரு விஷயம் சொல்லப் போறேம்மா!''

''அட, நானும் உன்கிட்டே ஒரு விஷயம் சொல்லப் போறேனே'' என்றாள் பரிமளா.

''என்ன?''

''நீ மொதல்ல சொல்லு....''

''நீங்கதான் பெரியவங்க. மொதல்ல நீங்க சொல்லுங்க.''

''சொல்லட்டுமா... ம்ம், எங்க பாண்டிய அண்ணனை நீ எப்படிக் கூப்பிடுவே?''

''மாமான்னு... ஏன்?''

''இனிமே அப்படிக் கூப்பிட மாட்டியாம். அப்பான்னு கூப்பிடுவியாம்.''

''என்னது?'' நந்தகுமார், உறைந்து போன குரலில் அதிர்ந்தான்.

''ஆமா, உங்கம்மாவுக்கும், பாண்டியண்ணனுக்கும் கல்யாணம் நடக்கப் போகுது...''

நந்தகுமாரின் கையிலிருந்து அந்தத் தூக்கு நழுவியது. முற்றத்தில் ணங் என்று விழுந்து உருண்டது. கையிலிருந்த சாக்லேட்களை அழுக்கு நீர் ஓடும் சாக்கடைக் கால்வாயில் எறிந்தான். விருட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு வீட்டிற்குள் ஓடிப் போனான்.

(தொடரும்)

# தராசு அவர்களைத் தமிழக அரசு கவனிக்கிறதாமே?



* வண்ணை கணேசன், சென்னை — 11.

? தற்போது விலைவாசி ஏறாத பொருள் எது?

! பழைய பேப்பர்தான். பல வருஷங்களாய் மூன்று ரூபாயைத் தாண்டவில்லையே.

* கா. அப்துல் மஜீத், திருமயம்

? டாக்டர் கானுவுக்கு எம்.ஜி. ஆரால், தமது சொந்தப் பணத்தில், நன்றியோடு அளிக்கப்பட்ட பரிசைக்கூட கல்கி இப்படிக் காழ்ப்புணர்ச்சி கொண்டு பதில் கூறியிருக்கிறதே! நன்றி மறவாப் பண்பை இப்படியா கொச்சைப்படுத்துவது?

! அந்தத் தங்க யானைப் பரிசை ஜப்பானுக்கு எடுத்துச் செல்ல முடியாமல் கஸ்டம்ஸ் தடைவிதித்தது? மத்திய அரசுதானே தடைவிதித்தது! அதுவும் எம்.ஜி. ஆரோடு கூட்டு வைத்துள்ள மத்திய அரசுதானே அதைச் செய்தது. அப்படியெல்லாம் சட்டத்தை மீறி விலையுயர்ந்த பரிசைத் தர வேண்டிய அவசியம் என்ன? பரிசின் மதிப்பு அதன் விலையில் இல்லை நண்பரே. அதனை அளிப்பவருடைய அன்பை அடிப்படையாகக் கொண்டது.

* கே.வி. நாதன், நெய்வேலி

? அமரத்துவம் அடைந்த சோஷலிஸ்ட் தலைவர் ராஜ்நாராயணனிடம் தங்களைக் கவர்ந்த அம்சம் எது?

! ஜனநாயக ரீதியில் இந்திரா காந்தியை எதிர்த்துப் போட்டியிட்டுத் தோற்கடித்ததன் மூலம் எவரெஸ்டை அடைந்தார். ஆனால் சூழ்ச்சிகள் மூலம் ஜனதாவை உடைத்த போது அதள பாதாளத்துக்குச் சரிந்து போனார்.

* ஆர்.கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்

? எதை நினைத்தால் பயமாக இருக்கிறது?

! சென்னையில் குடிநீர்த் தட்டுப்பாடு வரலாம் என்கிற செய்திகளைப் படிக்கும்போது.

* பா. நாராயணன், சென்னை — 40

? 'டெலிவிஷனில் இந்தி ஆதிக்கம் இல்லவே இல்லை' என்று மத்திய தகவல் துறை அமைச்சர் அஜீத் பாஞ்ஜா கூறியுள்ளாரே?





● பிடித்தது எது?

● மக அடிப்படையில்...

! தெரிந்தே கூறப்படும் பொய் இது.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? மதுரை விமான நிலைய வரவேற்பில், தொண்டர்களைக் கட்டுப்படுத்தும் பாதுகாப்புப் பணியாற்றிய காவலர் ஒருவரிடம் கோபத்தைக் காட்டி, தம் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்குமாறு, எம்.ஜி. ஆர். நடந்து கொண்ட சம்பவம் பற்றித் தங்கள் கருத்து என்ன?

! நீங்கள் சொல்வதுபோல், காவலர் ஒருவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டது உண்மையா பொய்யா என்று தெரியவில்லை. அது உண்மையாயின் மரியாதை மிக்க காவல் துறையை அப்படி நிர்ப்பந்தப்படுத்தியது கண்டிக்கத் தக்கதே.

* எஸ். எச். ஷேக்தாவுத், திருச்சி — 8

? தராசு அவர்களைத் தமிழக அரசு உன்னிப்பாகக் கவனிக்கிறதாமே, உண்மையா?

! உண்மையோ பொய்யோ தராசைக் கவனிப்பவர்கள் வெறும் தட்டுக்களை மட்டுமே கவனித்தால் கோட்டை விட்டுவிடுவார்கள். முள்ளைக் கவனிக்க வேண்டும்; எழுத்தை — அதில் உள்ள நியாயத்தைக் கவனிக்க வேண்டும். எழுதுபவனை அல்ல.

* ஆர். அப்துல் சலாம்; திருச்சி — 20

? 21ம் நூற்றாண்டில் டாக்டர் பட்டங்

களுக்கு 'வால்யூ' இருக்குமா சார்?

! இப்போது மட்டும் என்ன வால்யூ சார் வாழ்கிறது? அது ஜனரஞ்சகமாக்கப்பட்டுப் பல வருடங்களாகிவிட்டன. அதனால், நிஜ டாக்டர்களே இப்போது தங்களை டாக்டர்கள் என்று சொல்லிக் கொள்ளக் கூச்சப் படுகிறார்கள்.

*** கே.என். ஸ்ரீனிவாஸ், கொரட்டூர்**

**? மாடர்ன் உடைகளில் 'சிக்'கென்று பொருந்துபவர் ரேவதியா, அமலாவா, நதியாவா?**

! 'சிக்'க வைப்பவர் அமலாதான்.

*** இரா. சுவாமிநாதன், சீர்காழி**

**? கடன் கொடுத்தவர், கடன் வாங்கியவர் — இருவரில் யாருக்குக் கவலை அதிகம்?**

! இந்த இருவருக்குமே இல்லை. மூன்றாவது மனிதரான ஜாமீன் கொடுத்தவர் பாடுதான்



'சிக்'

சொரத்திலிருந்து சரிவு!

திண்டாட்டம் சுவாமி.

*** திருமதி இந்திரா கோபாலன், திருச்சி—14***

**? நம் பிரதமர் ராஜீவ் காந்தி, தம்முடைய சமீபத்திய மேற்கு வங்கப் பயணத்தில், அந்த மக்களிடம் பேசும்போது, 'நம்முடைய நாட்டை பாஷைகளின் அடிப்படையில் பிரித்தது மிகப் பெரிய தவறு. இதனால் ஒற்றுமைச் சக்தி குறைகிறது' என்று பேசியிருக்கிறாரே, இது என்ன திடீர் ஞானோதயம்?**

! வாஸ்தவமான பேச்சுத்தான். மொழிவாரி மாநிலங்களை இனி மாற்றி அமைக்க முடியாது. ஆனால், மொழிவாரி மாநிலங்களால் ஏற்பட்ட நோயைத் தீர்க்கக் கூடிய மருந்து ஒன்றும் இருக்கிறது. அது, இந்தி தொடர்பான நேருவின் வாக்குறுதிக்கு ஏற்ப அரசியல் சட்டத்தைத் திருத்துவதுதான். நோயைக் கண்டறிந்த டாக்டர் ராஜீவ், மருந்து கொடுக்கத் தயங்கலாமா? அப்படித் தயங்கும்போதுதான் ராஜீவின் பேச்சு ஜீவனிழந்து ஒலிக்கிறது.

*** ஆர். அரிகோபி, குடியாத்தம்**

**? 'ஹிந்து வாக்காளர்கள் ஒன்றுபட வேண்டும்' என்று சுவாமி சின்மயானந்தா கூறியுள்ளாரே? இதனால் மதப் பிரிவினையும் மதத்துவேஷமும் ஏற்படாதா?**

! ஒரு தலைவரை வழிபட்டு, அதற்காக வோட்டு; சினிமா மாயையில் சிக்கி, அதற்காகவோட்டு; பணத்தைப்பெற்றுக்கொண்டு வோட்டு; ஜாதி அடிப்படையில் வோட்டு; மதத்தின் அடிப்படையில் வோட்டு போன்ற எல்லாமே தவறுதான். கட்சிக் கொள்கைகளின் அடிப்படையில் வோட்டு என்பதே சரி. ஆனால் அந்த நிலையை மக்கள் அடைந்து விடப் போகிறார்களே என்று பயந்துதான் இன்னமும் அவர்களைத் தலைவர்கள் தற்குறிகளாகவே வைத்திருக்கிறார்கள்!

*** நந்திவர்மன், குருவரெட்டியூர்**

**? வாரியார் சுவாமிகளிடம் உங்களுக்குப் பிடித்தது எது?**

! கணீர்க் குரல். ஜனரஞ்சகமான ஸ்டைல். கருத்துச் செறிவு.

*** சித. வைரவன், சென்னை — 17**

**? விவேகானந்தர், அரவிந்தர், தாகூர், நேதாஜி, காந்திஜி, திலகர், அம்பேத்கார், சாவர்கர், இராதாகிருஷ்ணன், பாரதியார் ஆகியோருக்கு இந்தி பற்றிய கருத்து என்னவாக இருந்தது?**

! இவர்கள் அனைவரும் விடுதலைப் போராட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள். அந்தச் சமயத்தில் இந்தி அனைவரையும் இணைக்கும் என்றே காந்திஜி கருதினார். ராஜாஜி உள்பட மற்றவர்களும் அவ்வாறே நம்பினார்கள். ஆனால் அந்த நோக்கம் வெற்றி பெறவில்லை என்பதைக் கண்ணுக்கு மெய்யாக அனுபவத்தில் கண்டபிறகுதான் ராஜாஜி தமது கருத்தை மாற்றிக் கொண்டார். இந்தி மூலம் அவர்கள் எதைச் சாதிக்க நினைத்தார்களோ அது நடக்காது என்று தெரிந்த பிறகும் இந்தியைத் திணிப்பது, 'லட்சியத்தை அடையாவிட்டாலும் பரவாயில்லை; தவறான மார்க்கத்தைவிட மாட்டேன்' என்று கூறுவதாகும். ஒருமைப்பாடு என்ற லட்சியத்தை அடைய வேறு சிறந்த பாதையைத் தேர்ந்தெடுப்பதே புத்திசாலித்தனம்.

***ரூ 10 பரிசு பெறுபவர்:**

**திருமதி இந்திரா கோபாலன்,**
**D/4/65 BHEL டவுன்ஷிப்,**
**கைலாசபுரம்,**
**திருச்சி 620 014.**



ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III

17

ராஜ்மோகன் காந்தி

# கவர்னர் ஜெனரல் பதவியில் மேன்மை மிக்க ஒருவர்!

**தா**ற்காலிக கவர்னர் ஜெனரல் யார்?— மவுண்ட்பாட்டன், நேரு, பட்டேல் மூவரும் விவாதித்தனர். ''விவாதத்தின் இடையில் ஒரு விஷயம் சிறிதும் சந்தேகத்துக்கிடமின்றித் தெளிவாயிற்று'' என்று பின்னால் நினைவு கூர்ந்தார் மவுண்ட்பாட்டன். ''ராஜாஜியைத் தவிர வேறு யாரையும் அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுப்பது சாத்தியமில்லை.'' அவரை விட அதிக காலம் கவர்னராகப் பணிபுரிந்து அனுபவம் பெற்றவர் இருக்கலாம்; ஆனால் அவரைவிட மேன்மையான ஒருவர் இருக்க முடியாது. மகாத்மாவையும் ஆலோசனை கேட்டனர். ஸி. ஆரின் நியமனத்துக்கே அவர் முழு ஆதரவு அளித்தார். அவரது ஒப்புதலைப் பெற்ற பிறகு ஸி. ஆர். நவம்பர் 10 முதல் 24 வரை கவர்னர் ஜெனரலாக இயங்குவார் என்று அக்டோபர் இறுதியில் அறிவிக்கப்பட்டது.

நாமகிரியும் மெய்க்காப்பாளர் (ஏ.டி.ஸி.) சிங்காரவேலுவும் உடன்வர, ஸி. ஆர். நவம்பர் ஒன்பதாம் தேதி இந்திய விமானப் படையைச் சேர்ந்த ஒரு டகோடா விமானத்தில் புது தில்லி வந்து சேர்ந்தார். விமான நிலையத்தில் பட்டேல் காத்திருந்தார். இருவரும் ஆலிங்கனம் செய்து கொண்டனர். ஸி. ஆரை வரவேற்க நேருவும் புறப்பட்டிருந்தார். ஆனால் காலதாமதமாகிவிடவே வழியில் ஸி. ஆர்., பட்டேல் ஆகியோருடன் சேர்ந்து கொண்டார். அனைவரும் கவர்னர் ஜெனரல் மாளிகையை நோக்கிச் செல்ல, அங்கு மவுண்ட்பேட்டன் தம்பதி ராஜாஜியை வரவேற்றனர். மறுநாள் காலை பத்து மணிக்கு, கவர்னர் ஜெனரலாக இயங்கிய முதல் இந்தியர், பிரதம நீதிபதி கனியா முன்னிலையில் பதவிப் பிரமாணம் ஏற்றார். மாலையில் காந்திஜியைப் போய்ப் பார்த்தார் ஸி. ஆர்.. புதுதில்லி கலவரங்களையொட்டி காந்தி, பஞ்சாப் செல்வதை ஒத்திப் போட்டிருந்தார். பிர்லா, மாளிகையில் அவருடைய

விருந்தினராகத் தங்கியிருந்தார் காந்தி. இரண்டு வாரம் கவர்னர் ஜெனரல் பதவி வகிக்கையில் ஸி. ஆரை வந்து சந்திக்காத முக்கிய மந்திரியோ, ராஜ தந்திரியோ, அரசியல்வாதியோ, அதிகாரியோ இல்லை எனலாம். அரசியல் சாசனத்தைவகுத்த அரசியல் நிர்ணய சபையானது, நாடாளு மன்றம் என்ற முறையில் முதன் முதலாகக் கூடியபோது அதனைத் தொடங்கி வைக்க கவர்னர் ஜெனரல் என்ற முறையில் ஸி. ஆர். வரவேண்டியிருந்தது. ஆனால் அவரது இரு வாரப் பதவிக் காலத்தின் உச்ச கட்டம் நவம்பர் 20-ம் தேதி எனலாம்.

அன்றுதான் அரசகுமாரி எலிஸபெத்துக்கும் ஃபிலிப் கோமகனுக்கும் திருமணம். அரச குடும்பத்தைச் சேர்ந்த புதுமணத் தம்பதிக்கு ஸி. ஆர். வாழ்த்துத் தந்தி அனுப்பியிருந்தார். தவிர திருமணத்தைக்கொண்டாட கவர்னர் ஜெனரல் மாளிகையில் பெரியதொரு வரவேற்பும் அளித்தார். வரவேற்பு ஜாஜ்வல்யமாக அமைந்தது. மாளிகையின் நடனக் கூடம் இந்திய மூவர்ணக் கொடியாலும் பிரிட்டிஷ் யூனியன் ஜாக் கொடியாலும் அலங்கரிக்கப்பட்டது. நேரு, பட்டேல் தவிர, தலைநகரில் இருந்த அயல்நாட்டுத் தூதர்கள் அனைவரும் வந்திருந்தனர். மந்திரி சபைமுழுவதுமாக இருந்தது. மேலும்தில்லிப் பிரமுகர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

ஆனால் ஸி. ஆருக்கு 20—ம் தேதி மிக முக்கியமானதாக விளங்கியதற்குக் காரணம் இந்த வரவேற்பு அல்ல. அன்று பிற்பகல் சுமார் ஒரு மணி நேரம் இந்திய அரசின் தலைவர் என்ற முறையில், கவர்னர் ஜெனரல் மாளிகையில் காந்திஜியை வரவேற்று உபசரிக்க வாய்ப்புக் கிடைத்ததால்தான் ராஜாஜிக்கு இந்தத் தினம் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாயிற்று.

காந்தி, கவர்னர் ஜெனரல் மாளிகைக்கு பலமுறை வந்திருக்கிறார். இங்குதான் இர்வினுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் கையெழுத்துப்போட்டார்; லின்லித்கோவை நண்பராக்கிக் கொண்டார்; வேவலுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்; மவுண்ட் பேட்டனிடம் 'ஐக்கிய இந்தியாவின் பிரதம மந்திரி பதவியை ஜின்னாவுக்கே கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டார். ஆனால் இந்திய அரசின் இந்தியத் தலைவர் என்ற முறையில் காந்திஜியை ஒருவர் வரவேற்பது இதுவே முதல் முறை; இதுவே கடைசித் தடவையாகவும் ஆயிற்று.

மகாத்மா, தமது விஜயத்தால் சிறப்பிப்பதற்கென ஓரிடத்துக்கும் போவதில்லை. கடந்த எத்தனையோ பல ஆண்டுகளாக அவர் எங்கே போனாலும் கடமைக்காகச் சென்றார்; உபசாரத்துக்காகப் போவதில்லை. எனவே, கவர்னர் ஜெனரல் மாளிகைக்கு அவர் விருந்துண்ணவோ, டீ அல்லது காப்பி அருந்தவோ, அல்லது சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாம் என்பதற்காகவோ கூட வருவதென்பது சாத்தியமில்லை. ஆனாலும் தமது தலைவரும் உறவினருமான காந்தி, தமது

# இளைஞர்கள் கேட்கிறார்கள்...

எங்கள் கிராமத்தில் சாலை வசதி இல்லை, குடி தண்ணீர் இல்லை, ஆஸ்பத்திரி இல்லை என்று புகார்கள் வந்து கொண்டிருக்கும் சமயத்தில், புதுக்கோட்டையிலிருந்து ஒரு மாறுபட்ட புகார் வந்திருந்தது. எழுதியவர் ஒய்.எம்.எப்.ஏ. என்னும் கால் பந்தாட்ட அமைப்பைச் சேர்ந்த ஞான.ஆரோக்கியம். களத்தில் (அதாவது விளையாட்டு மைதானத்தில்) அவரை நேரில் சந்தித்தபோது.....



ஞான ஆரோக்கியம்

''எங்க அ[illegible] இளைஞர்கள் பலர் நம்து மாநிலத்திற்காக விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். கால்பந்து ஆட்டத்திற்கு மரத்தாலான கோல் கம்பங்கள் இருந்தன. பல சமயங்களில் அவை திருட்டுப் போயிருக்கின்றன. பின்னர் அமைச்சர் திருநாவுக்கரசு புண்ணியத்தில் இரும்புக் கம்பங்கள் போடப்பட்டன.

''இப்போதுகைப்பந்து,பூப்பந்து,ஆகியவற்றுக்கு நிரந்தரக் கம்பங்கள் கிடையாது. நிறைய இளைஞர்கள் ஆர்வமுடன் இங்கே'விளையாட வருகிறார்கள். மாவட்ட விளையாட்டு மையத்திடம் இந்த விளையாட்டுக்களுக்கும் இரும்புக் கம்பங்களைப் போடச் சொன்னோம். ஆனால் மாநில விளையாட்டுக் கவுன்ஸிலிடம் பணம் இல்லாததால் போட முடியாது என்று கூறி விட்டார்கள். இதோடு, எங்கள் விளையாட்டு மைதானத்தைக் காலைக் கடன்களுக்காகப் பலரும் அசிங்கப்படுத்துகிறார்கள். அதைத் தடுக்க ஒரு சுற்றுச் சுவரும் கட்ட வேண்டும். நீங்கள்தான் கலெக்டரிடம் கூறி இந்த வசதிகளைச் செய்து தர ஏற்பாடு செய்ய வேண்டும்...'' என்றார் ஞான.ஆரோக்கியம்.

ஆசிய விளையாட்டிலும், ஒலிம்பிக்ஸிலும் இதுபோன்ற விளையாட்டுக்களில் மரண அடி வாங்கிக் கொண்டுவரும் நாம் நமது விளையாட்டு வீரர்களை நொந்து கொண்டு என்ன பயன்? இவர்களைப் போன்று இன்னும் எத்தனை இளைஞர்கள் எத்தனை இடங்களில் இப்படி அடிப்படை வசதிகள்கூட இல்லாமல் தவிக்கிறார்களோ!

— பாபு

தாற்காலிக இல்லத்துக்கு விஜயம் செய்ய மாட்டாரா என்ற எதிர்பார்ப்பு ஸி. ஆருக்கு இருக்கவே செய்தது. அதேபோல் காந்திக்கும் தமது நண்பரும் சீடருமான ஸி. ஆர்., புதிய சூழ்நிலையில் எப்படி இருக்கிறார் என்று பார்க்கிற ஆவல் கிளர்ந்தெழத்தான் செய்தது. உத்தரப்பிரதேச கவர்னரான சரோஜினி நாயுடு நோயினால் பாதிக்கப்பட்டு கவர்னர் ஜெனரல் மாளிகையில் உடல் தேறி வந்தார். இது காந்திக்கு வசதியாகப் போயிற்று. இருபதாம் தேதி மதியம் பன்னிரண்டு மணிக்கு ஸி. ஆர். காந்தியைக் காணச் சென்றபோது, நோயாளியைக் காணத் தாம் வரவிருப்பதாகக் காந்திஜி சொன்னார். அப்படி வரும்போது, சரோஜினி நாயுடு யாருடைய விருந்தினராகத் தங்கியிருக்கிறாரோ அவரைப் பார்க்காமல் திரும்புவது பண்பாடாகாது அல்லவா?

பிற்பகல் இரண்டரை மணிக்குத் தெற்கு வாசலில் காந்தி வந்தபோது, ஸி. ஆர். மலர் தூவி வரவேற்கத் தயாராகக் காத்திருந்தார். என்றென்றும் தமது அன்புக்குப் பாத்திரரான, தம்மால் பின்பற்றப்படுகிற ஒருவர் மீது ரோஜா இதழ்களைத் தூவி வரவேற்றார் ஸி. ஆர். இருவரும் சரோஜினி நாயுடுவுடன் அரை மணி நேரம் இருந்துவிட்டு வரவேற்புக் கூடத்துக்கு வந்தனர். ஒரு சோபாவில் அமர்ந்து முப்பது நிமிடங்கள் அளவளாவினர். "ஒரு இட்டிலி சாப்பிடலாமா?" என்று கேட்டார் ஸி. ஆர். "இட்டிலியா?" என்று குறும்பாகச் சிரித்தார் மகாத்மா. "குஜராத்தில் சம்பந்திக்கு இனிப்புக்களைத்தான் வழங்குவார்கள்!"

முப்பது வருஷங்களுக்கு முன்னால் ஸி. ஆர். சென்னையில் தமது எளிய இல்லத்தில் காந்தியை விருந்தினராகப் பெற்றிருந்தார். அப்போது மகாத்மாவின் தலைமையில் அமைந்திருந்த சேனையில் தம்மையும் ஒருவராகச் சேர்த்துக் கொண்டார். அவர்கள் நடத்த நினைத்த போரின் முடிவு என்னவாக இருக்கும் என்பது யாருக்குமே தெரியாத நிலை அன்று. இப்போதோ வெற்றிக்குப் பின் ஸி. ஆரும் மரியாதைக்குரிய அவருடைய விருந்தினரும் ஒருசேர அமர்ந்திருந்தனர்! அதுவும் எங்கே? எதிரியின் அதிகார பலத்துக்கும் பெருமைக்கும் மாட்சிமைக்கும் எடுத்துக்காட்டாகவிளங்கிய அரண்மனையிலேயே அருகருகே அமர்ந்திருந்தனர். இந்த வெற்றியுடன் துயரமும் கலந்திருந்தது. காந்தியும் இனக்கலவரங்கள் காரணமாக வேதனையை அனுபவித்துக் கொண்டுதான் இருந்தார். சமீபகாலமாக இருவருக்குமிடையே அபிப்ராய பேதங்கள் சில உருவாகியிருந்ததும் மெய்தான். ஆனால் வரலாற்றுச் சக்கரம் சுழன்று அவர்கள் உறவினை ஓர் உச்சகட்டத் துக்கல்லவா கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது!

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்





இவைதான் ராஜகோபாலபுரத்திலுள்ள தார்ச் சாலைகளாம்!

# ஒன்றும் கண்டுகொள்ளாத ஹவுஸிங்போர்டு

"ஏம்பா, ராஜகோபாலபுரத்துக்கு வர்றியா?"

"ஹவுஸிங் போர்டு வீடுங்க இருக்கே... அங்கேதானுங்களே?"

"ஆமாம்பா!"

"வண்டி கெட்டுப் போயிடும் ஸார். நான் வரமாட்டேன். அங்க ரோடும் இல்லே, ஒண்ணும் இல்லே.... குண்டும் குழியுமாய்..."

— இது ஆட்டோக்காரரின் அங்கலாய்ப்பு.

'டேய் முத்து, ராஜகோபாலபுரத்துல வீடு ஒண்ணு காலியா இருக்கு. நீதான் வீடு தேடிண்டிருக்கியே!"

"வேறே ஏதாவது இடம் சொல்லப்பா... ராஜகோபாலபுரத்தில குடிக்கத் தண்ணியே கிடைக்காது. பயங்கரக் கொசுத் தொல்லே. மழைக்காலத்தில் காட்டுப் புதுக் குளத்தில் தண்ணீர் ரொம்ப ரொம்ப, எங்கே ஏரிக் கரை உடைத்துவிடுமோ என்ற பயத்தின் அளவும் நமக்கு ஏறிக் கொண்டே இருக்கும். வேண்டாம்பா ஆளை விடு...."

1976ல் வயல்களை வாங்கிப்பிளாட் போட்டு, பிளாட் ஒன்று மூவாயிரம் முதல் ஆறாயிரம் வரை விற்கப்பட்ட ஹவுஸிங் போர்டு காலனியான ராஜகோபாலபுரத்தின் இன்றைய நிலை இதுதான். சுமார் அறுநூறு வீடுகளைக் கொண்ட அந்தக் காலனியில் ஒரு மாஜி அமைச்சருக்கும், தற்போது அமைச்சராக இருக்கும் ஒருவருக்கும்கூட வீடுகள் உள்ளன. அது மட்டுமா? தாசில்தார்கள், கலெக்டரின் பி.ஏ.க்கள், வக்கீல்கள், வங்கி ஊழியர்கள் என்று பலரும் இங்கு எல்.ஐ.ஜி., எம்.ஐ.ஜி; ஹெச்.ஐ.ஜி என்று வீடுகளைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் காலனி சங்கத் தலைவர், பக்கீர் முகமதுவையும் மற்றவர்களையும் சந்தித்தபோது தங்கள் மனக்குறையைக் கொட்ட ஆரம்பித்துவிட்டார்கள்.

"எங்களிடமிருந்து ஆண்டுக்கு 75,000 ரூபாயை முனிசிபாலிடி வரியாக வசூலிக்கிறது. ஆனால் வசதிகள் கேட்டால்'நாங்கள் இன்னும் உங்கள் காலனியை எங்கள் வசம் எடுத்துக் கொள்ளவில்லையே' என்கிறார்கள். அப்புறம் எப்படி வரி வசூல் செய்தார்களாம்? காலனிக்குள் ஹவுசிங் போர்டால் போடப்பட்டதாகச் சொல்லப்படும் சாலைகள் எல்லாம் சாலைகளே இல்லை. குட்டைகள் போலாகிவிட்டன. ஹவுஸிங் போர்டு ஒன்றுமே கண்டு கொள்வதில்லை!" என்கிறார்கள்.

நாங்களும் காலனியை ஒரு சுற்றுச் சுற்றினோம். பிரும்மாண்டமான தண்ணீர் டாங்க் ஒன்று கட்டப்பட்டு நீரின்றி வெறுமையாய் நிற்கிறது. அரசின், அதன் ஓர் அங்கமான வீட்டு வசதி வாரியத்தின் கையாலாகாத் தனத்தை உணர்த்துவது போல....

— அருணை

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032.

Editor: K. Rajendran

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034. (Phone: 473389)

*Administrative Office:* Race Course Road, Guindy, Madras-600 032 (Phones: 431543, 434157 Press: 434190)

# நியூட்ராமுல் சக்தி



கசீம வளம்கொழிக்கும் அமுல் பால், நலம் தரும் மால்ட், இன்சுவைமிக்க கோக்கோ, கும்மாகும்! இவற்றின் நற்பயனுக்குத் தான் வலிமூட்டுகிறது நியூட்ராமுல், எதனாலும் மிஞ்சமுடியாத நயவிலையிலே கிடைக்கிறது!

| | 1000 gms. | 500 gms. | Refill. |
|---|---|---|---|
| நியூட்ராமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.






குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெட. லிட்., ஆனந்த் 388 001.

## நியூட்ராமுல்

விளங்குங்கள் நியூட்ராமுல் வஸ்தாத்தாக

daCunha/GCM/135/86 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka